225

# "THE EDUCATION OF YOUNG INDIA."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever yon can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

" HITCH YOUR WAGON TO A STAR." " TO THINE OWN SELF BE TRUE.'




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum.*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] **1914**ஞ ஜனவரிமீ, பிரமாதீசஞ தைமீ [சஞ்சிகை 10.

## EDUCATION : THE TRUE WEALTH OF NATIONS.

" True Education implies a full grasping of the ideas and ideals presented to the receptive child-mind. It comprises the three-fold elementary processes of (1) action and re-action, (2) impression and expression, and (3) retention and reproduction, finally leading to the assimilation and absorption of the fundamental principles of Truth presented to the child-mind. Unless one becomes a child—born again, so to say,—one cannot grasp the living principles of Truth presented to the Mind. For this reason great men who have to be in constant touch with the world, attuning themselves to the ever-changing conditions of its growth, do not lose their child-heart. This possession of the ever-living Child-heart by the men and women of a country is the greatest treasure of humanity from which flows the true and increasing wealth of nations."—*Open address by parents of India.* (*Vide Children's Record Number of the Viveka Chintamani.*)

" Your liberty, your rights, your emancipation from every injustice in your social position, the task which each of you is bound to fulfil on earth—all these depend upon the degree of education you are able to attain."—*Mazzini—Quoted by a London Correspondent.*

## Lord Hardinge's Interest in Education.

" I think it must be generally known by this time how keenly I am interested in the question of *the education of young India.* I have had to deal with the subject in many speeches and the money that has been poured out by the Government of India during the past few years for the improvement and expansion of educational facilities, is sufficient testimony to the importance attached to this matter by my Government. I must, however, confess that sometimes I have a qualm of doubt as to whether this expenditure is being directed along the most useful channels, for not only we sometimes see the products of our schools and Universities stranded without suitable occupation when their days of tutelage are over but I also feel that in some cases the energies of teaching institutions are concentrated upon the idea of passing their boys through certain examinations while such important matters as the character of their students and the tone of their environment, not to speak of their physical well-being, do not receive all the attention they demand."—*Speech at St. John's College.*



## விவேக சிந்தாமணி.

### வித்யாதனமே தனம்.

"கல்வியினுங்கில்லை சிற்றுயிர்க் குற்றதுணை."

நமது சக்ரவர்த்தி ஜ்பார்ஜ் அரசரவர்கள் இந்தியாவுக்கு விஜயமாய் வந்திருந்த காலம் கல்கத்தா யூனிவர்ஸிடி சபையார் கொடுத்த வந்தனோபசாரத்துக்கு பதிலுரைத்த பொழுது வித்யாதனமே தனமென்று வித்யா லக்ஷியத்தைப்புகழ்ந்து ஒவ்வொரு பிள்ளைகளும் வித்தையிற்பழகி அவரவர் தொழிலில் சிறந்தவராய் தேசத்துக்குப் பெருமையை உண்டு பண்ணத்தக்க குணமும் மணமும் பொருந்தியவர்களா யிருக்கவேண்டியதின் முக்கியத்தைப் பற்றி மிகவும் வற்புறுத்திப் பேசினர். அதை யொட்டி இந்தியா கவர்ன்மெண்டார் சென்ற பிப்ரவரி மாசம் 21வயிட்ட வித்யா ஸம்பந்தமான தீர்மானம் செய்தார்கள். அதை விளக்கி அரசர் பிரதிநிதியாம் லார்ட் ஹார்டிஞ்சவர்கள் ஸெப்டெம்பர்மீ 17வயன்று இந்தியாசட்ட நிர்மாணசபை முன் கவர்ன்மெண்டாருடைய வித்யா லக்ஷிய மின்னதென்றும் குழந்தைகள் அடையவேண்டிய வித்யாபலன் இன்னதென்றும் நன்றாக விஸ்தரித்துப் பேசினர். இதை அவர் வாய்மொழியாகத்தானே விவேக சிந்தாமணி பாலபோத ஸமஷ்டி-சேவை ஸாஸந சஞ்சிகையில் வியாக்கியானத்தோடு பதிப்பித்திருக்கிறோம். குழந்தைகள் அரசர் பிரதிநிதிக் களித்த வந்தனோபசார மொழியில் இதைப் பற்றி நன்றாய்ச்சொல்லியிருக்கிறார்கள்.

"இந்தியா முழுமைக்கும் ஏற்றமாயுள்ளவுங்கள் சட்ட நிர்மாணசபையார் முன்னே பேசிய வும் திருவாக்கைப் பெருவாக்காய்க்கொண்டாடியே நாங்க ளெல்லாம், பக்தி சிரத்தை நிறையவே யும் உபதேச மொழிகேட்டு, தாழ் மனத்தால் அதைக் கிரகித்து மாண்பாக உள்ளமைத்து, "சித்திரமும் கைப் பழக்கம், செந்தமிழும் நாப் பழக்கம்," என்றெங்கள் அம்மையார், சொன்னசொல் தவறாதே சின்னஞ்சிறுவர் நாங்கள், சிறுமதியேமானாலும், உள்ளத்து உவகைதூண்ட உள்ளன்பு முந்தித் தள்ள, 'கைப்பழக்கம்' பெற்றமட்டில் மனப் பழக்கம் கொண்டையா, சித்திரமா யெழுதி வைத்தோம்; நாப்பழக்கம் பெற்றமட்டில் செந்தமிழில் சொல்ல வந்தோம்.

"கற்றதோர் கல்வியும் மனப் பழக்கம்" என்றுளதால், உள்ளத் துணர்ந்ததையாம் உள்மர்மம் ஓர்ந்தாய்ந்து, 'மாதாவைப் பூஜை செய்தால் மாட்சி யெல்லாம் பெறலாமே' என்றுள்ள பழமொழியும், புநிதமாய் வழங்கிவரும் புராண இதிஹாஸங்களும், பொய்க்காமல் நாங்களுமே புநித சித்திரம் வரைந்துள்ளோம்."

இந்தப் புநித சித்திரம் ஜந்ம பூமியை மாதா வாய்த்தொழுது உபாஸனவழியில் விருத்தி யடைவதற்கு அநுகூலமாயுள்ளது. ப்ரஹ்லாதாழ்வார் நாரதமுனி தாம் கருப்பவாஸமா யிருக்கையில் தாயாருக்குச்செய்த மந்திரோபதேசம் தனக்கும் பலிக்க "ஓம் நமோ நாராயணாயவித்தம்" என்கிற குருசொல் ஒரு சொல்லைக் கொண்டே எல்லா இன்னலையும் கடந்து பகவானைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டுய்ந்தார். ஆதலால் குழந்தை-மனம் மாறாதவர்களுக்குச் செய்யும் தூய உபதேசம் பச்சை மரத்தாணி போல் உள்ளத்துறைக்கும். இந்த உபதேசம் தேசஸமஷ்டிக்குத் தலைவராயிருக்கும் அரசராலும் அவர் பிரதிநிதியாலுமே செய்யப்பெற்றோமானால் அது மிகவும் விசேஷம் தான். ஏனெனில் அரசன் பிரஜைகளுக்குப் பிதாவும் குருவுமாகிறான்.

பிதுர்ஸ்தானத்திலிருந்து குருஉபதேச முறையாகக் குழந்தைகளுக்குச் செய்த உபதேசம் வீண்போகலாகாது. சென்னை கவர்ன்மெண்டார் நமது சக்ரவர்த்தியார் பேசிய

பேச்சுக்களை யெல்லாம் ஸ்வபாஷைகளில் அச்சிட்டு ஒவ்வொரு பள்ளிக்கூடங்களுக்கும் ஒவ்வொரு கிராமத்துக்கும் அனுப்ப உத்தரவு செய்திருக்கிறார்கள்.

கவர்ன்மெண்டார் அவர்கள் செய்யும் முயற்சியில் ஜனங்களிற் பிரமுகர்களாயுள்ளவர் சேர்ந்துழைக்க வேண்டுமென்று அடிக்கடி கோரியிருக்கிறார்கள். ஆகவே நாமும் ஜன ஸமூகத்திற் பிரமுகர்களா யிருக்கும் பல்லோர் உதவியையும் ஆசீர்வாதத்தையும் மேற்கொண்டு பகவத் ப்ரஸாதத்தாலே பாலபோத ஸமஷ்டி-சேவை ஸாஸநமாகிய சித்திரத்தைத் தீட்டி, அதை யாராதிக்கும் வழியையும் அரசர் பிரதிநிதிக்குச் சொல்லிய உபசார மொழியில் சுட்டிக் காட்டினோம்.

வித்தையென்றால் என்ன? வித்தை யென்றாலும் படிப்பு என்றாலும் ஒன்றே. வித் = அறிதல், என்னும் தாதுவிலிருந்து வித்தை வந்தது. படி = மனதைப் படியச்செய்தல், என்னும் பகுதியிலிருந்து படிப்பு வந்தது. அறியும் அறிவைத் தந்து தீரத்தையளிப்பது வித்தை. அப்படியே மனப்பழக்கத்தால் சித்தவிருத்தியாகிய மனப்போக்கைப் படியச்செய்யும் திறத்தையளிப்பது படிப்பு.

மனம் சங்கல்ப-விகல்ப ரூபமானது; அப்படி யென்றால் நினைப்பும் மறப்புமாயிருப்பது. இந்த நினைப்பு-மறப்புத்தொழிலை யடக்கியாள்வது மஹாகஷ்டம். ஆகையால் மனதை மதங்கொண்ட யானைக்குச் சமானமாக உவமிப்பர் பெரியோர்.

"ஆனை மும்மதம் கொண்டால் யாரே அடக்கலாகும்?" என்று திருமூலர் திருமந்திரம் ஓதியிருக்கிறார்.

"தன்னைத்தான் கரியாகத் தானடங்கிற்
பின்னைத்தா னெய்தாற் பயனில்லை—தன்னைக்
குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யிற்
பிடி படுக்கப்பட்ட களிறு."

என்றுபாடி யிருக்கிறார் வித்வத்லக்ஷிய மறிந்த கவியும்.

"To Thine own self be true" என்று இதையே சொல்லியிருக்கிறார் ஆங்கிலவரகவியாகிய ஷேக்ஸ்பியரும்.

தானே சாக்ஷியாக (அறிவானாக) இருந்து (கூடஸ்தனாய்) தன்னையறிந்து, இதை அறிய வேணும் என்கிற ஆத்திரங்களெல்லாம் அடங்கினால், பின்னாலே தன்னமைதியைக் கலைக்க வென்று எய்யப்படும் அஸ்திர சஸ்திரங்களாலே பயனில்லை. இதற்கு உதாரணமாக் வரகவி ரவீந்த்ரநாத் தாகோர் எழுதிய சிறு கதையொன்றை "காசிவாசியும் தாஸி வேசியும்" என்னும் தலைப்பிட்டு இச்சஞ்சிகையின் மற்றோரிடத்தில் பிரசுரித்திருக்கிறோம்.

தன்மனம் படியப்பெற்றார், எல்லாருக்கும் படிந்து நடந்து முடிவில் எல்லாரையும் படியச் செய்வார்.

காசிவாசி வந்ததையெல்லாம் ஏற்றுக்கொண்டு படிந்துபோனதால், கடைசியில் அவரிடம் சீற்றங்கொண்ட அரசனும் தன் கர்வம் அடங்கச் சிந்திக்கலானான்.

ஆகையால் "தாழாமல் தாழ்ந்து, வாழாமல் வாழவைக்கும் தெய்வம்" என்பது உண்மை. இப்படிப்பட்ட தாழ்மையே பூஷணமாகவுடையது வித்யாலக்ஷியம்.

யேசுநாதர் தம் சிஷ்யர் கால்களைக்கழுவி அவர்களுக்குத் தாழ்மையின் பெருமையை உபதேசித்தார்.

அவர் இகபர வித்தையிரண்டிலும் வல்லவராயினும் (சோற்றுப்படிப்பாகிய) எழுத்துப் படிப்பற்றவர். அவர் ஒரு தச்சுவேலைக்காரன் மரபில் அவதரித்தார். அவரை சிலுவையிலறைந்த போதும் அவர் பொறுமையே பூஷணம் என்றுபொறுமையை வகித்திருந்தார்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர் ஏட்டுப் படிப்புப் படித்தவரல்ல. ஆயினும் அவருடைய திருவாய் மொழிகளைக்கேட்டு மாக்ஸ்-முல்லர் முதலான மேற்றிசை மஹாபண்டிதர்களும் மனமுவந்துபெருமைகொண்டாடினார்கள்.

வித்தைக்கு லக்ஷியம் ஸர்வஜ்ஞத்வம் ஆதலால்தான் "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழா அரெனின்?" என்றார் திருவள்ளுவநாயனாரும். இவரும் ஏட்டுப்படிப்பு படித்தவரல்ல. இக்காலத்தில் எத்தனையோ பெரியோர்க ளிருக்கிறார்கள். அவர்களெல்லாம் ஏட்டுப்படிப்பினால் முன்னுக்கு வந்தவர்களில்லை. சோற்றுப்படிப்பு சமயத்துக் குதாவாது. ஏனெனில் அது பரத்தையர் சுகம்போல் காசைப் பொருத்ததாயிருக்கும்.

காசும் பணமும் வேணுமானாலும், காசாலும் பணத்தாலும் சுகம்பெற முடியாது. ஏனெனில் அந்த ஐசுவரியம் மனிதனுக்கு அந்நியமாயுள்ளது.

சுகமோ மனிதனுக்கு அநந்நியமாயுள்ளது. அதாவது, மனிதனிலும் வேறாகவில்லாதது. ஆகையால் ஆத்மசிந்தையினாலேயே எல்லா சுகிர்தமும் உண்டாகும். ஆத்மசிந்தையென்றால் அறிவு தானாய்ச் சிந்திக்கும் சிந்தை. அறிவின் வெளிச்சமில்லாவிட்டால் மனதிற்கு வேறு வெளிச்சமில்லை. விஷய சிந்தனையால் மனது இருளடையும்; ஆத்ம (அறிவு) சிந்தனையால் மனது அருள்பெறும். ஆகையினால் வித்யாதன மெல்லாம் தன் ஹிருதயத்துக்குள் தானே யிருக்கிறது. அதற்கு இஷ்டதேவதை குமரேசன் அல்லது தேவகுமாரன். அவன் எல்லாக் குழந்தைகளின் ஸமஷ்டி ரூபமா யிருக்கிறான். அவன் அருளைப்பெறுவதே வித்யாதனமாகும். அதைப்பெற்றால் உலக ஸம்பத்துக்களெல்லாம் தானே வரும். இது ஸர்வ மத ஸம்மதம்.

---

## THE LITERATES AND THE MASSES.

## படித்தவர்களும் படியாதவர்களும்.

படித்தவர்கள் என்னும் பதம் எழுத்து வாசனையுடையவர்களைக் குறிக்கும். இப்படிப் பட்டவர்கள் இந்தியாவில் சொற்பந்தான். எழுத்து வாசனையறியாதவர்களோ $29\frac{1}{2}$ கோடி ஜனங்களிருக்கிறார்கள், இவர்களைப் படித்தவர்களென்றும் பாமரர்களென்றும் வகுத்து படித்தவர்களுக்கனுகூலமாயிருப்பது பாமரர்களுக்குப் பிரதி கூலமாக விருக்குமென்று ஒருவர் லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் எழுதியிருக்கிறார். அவருடைய கருத்து என்னவென்றால், இங்கிலீஷ் படித்தவர்களுடைய உபத்திரவமில்லாவிட்டால் பாமர ஜனங்களை யாள்வது சுலபமாயிருக்கு மென்பது போலும்; ஆனால் உண்மை அப்படியல்ல. மனித ஜன்மமெடுத்தவன் படித்தாலும் படிக்காவிட்டாலும், நலந்தீதுணரும் சக்தியுடையவனாயிருக்கிறான். நன்மை செய்வாரை நல்லவரென்றும் தீமை செய்வாரைத் தீயவரென்றும் பகுத்துணர்ந்து வழக்குரைக்கச் சாமர்த்தியம் இல்லாவிட்டாலும் நலந்தீதுணரும் இயற்கையறிவு மட்டும் பாமர ஜனங்களுக்குண்டு. அந்த இயற்கை யறிவைக் கொண்டு அவர்கள் ஹிதாஹிதமுணர்ந்துய்வார்கள். படித்தவர்கள் உத்தியோகங்களைத் தேடுவதனால் பாமரர்களுக்கு இடையூறு ஒன்றுமில்லை. ஆனால் ஸ்வஜாதியில் படித்தவனொருவன் உத்தியோக நிலையிலிருந்து அக்கிரமங்கள் செய்வானாகில் அது அவர்கள் மனதை அதிகமாக உறுத்துகிறது. படித்ததற்கழகு ஜீவகாருண்ய முடைமை. அது இல்லாவிடத்து படித்தவன் பாமரனிலும் கடையனாகிறான். ஏனெனில் அவனுக்குள்ள "அறியாமை" இவனிடத்திலுமிருந்தாலும், அக்கிரமங்கள் செய்வதற்கு வேண்டிய சமர்த்துமட்டும் கூட இருக்கிறது. இது துன்பத்துக்கிடமாகிறது.

ஜீவகாருண்ய மென்பது நல்லிதயத்திலிருந்துண்டாகியூறும் ஓர் அமிர்தவூற்றாகும். "கற்றதனாலாயபயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழா அரெனின்?" என்று திருவள்ளுவர் சொன்னதின் அருத்தமென்ன? "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றிருப்பதனால், மனப்பழக்கம் தெய்வசிந்தனையை உண்டு பண்ணாதாயின் அதற்கு விரோதமான சிந்தனையையே உண்டுபண்ணும். தெய்வசிந்தனை ஜீவகாருண்யம் பொருந்தியது, அதற்கு விரோத

மான சிந்தனை ஜீவஹிம்ஸையையே உண்டு பண்ணும். ஆதலால் ஜீவகாருண்யமில்லாத படிப்பு ஆபத்தே விளைக்கும். ஜீவகாருண்யத்துக்கு ஹிருதய சுத்தி அவசியம். ஹிருதய சுத்தி அல்லது அஹத்தூய்மை வாய்மையினாலன்றி விர்த்திக்காது. "வாய்மையால் அஹம் துய்மையாம்." இந்த வாய்மைக்குணம் அதாவது ஸத்யவிருதம் தான் படித்தவர்களிடத்தில் காண்பதரிதாயிருக்கிறது. ஸத்தியவிருதம் குறையக்குறைய அக்கிரம அழிச்சாட்டியங்கள் அதிகரித்தே வரும். இவ்விதத்தில் படித்தவர்கள் படியாத பாமரர்களைவிடத் தாழ்ந்தபடியிலே தானிருக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் வாக்கு நாணயமெல்லாம் பொன் வெள்ளிநாணயங்களுக்கொப்பாயிருக்கிறது. பணத்துக்கு 'ஆட்கொல்லி' என்கிற பேர் கிடைத்தது போல் அவர்கள் வாக்கு நாணயமும் 'ஆட்கொல்லி', அதாவது மனுஷத்தனத்தைக் கொன்று விடுவதாயிருக்கிறது. இக்காலத்துப் படிப்புக்கு இப்படிப்பட்ட கெட்ட பேர் வரக்கூடாதென்பதே பாலபோத ஸம்ஷ்டி-சேவை ஸாதன முயற்சி செய்வோர் எல்லாருடைய உண்மையான கோரிக்கையும் பிரார்த்தனையுமாயிருக்கிறது.

---

## "THE CROWN OF HUMILIATION" OR, KABIR AND THE WOMAN.

*(After Rabindranath Tagore.)*

### காசிவாசியும் தாசிவேசியும்.

மாசங்களிற் சிறந்தது மார்கழி. அந்த மாசத்தில் எல்லாரும் அதிகாலையிலெழுந்து தெய்வத்தைதொழுவார்கள். பண்டாரங்கள் விடியற் காலையில் வீடு வீடாய்ச் சென்று சோமக்கலம் தட்டி சங்கத்வனி செய்து தேவாரம்பாடி கிரஹஸ்தர்களை யெழுப்பிவருவார்கள். எம்பெருமான் திருப்பள்ளியெழுச்சி கொள்ளும் காலம் அது.

ஒரு நாள் அதிகாலையில் ஊருக்குப் புறத்தினுள்ள மந்தைவெளிக்கப்பாலுள்ள கபாலீ வனத்தில் ஒரு பரதேசி வந்திருக்கக் கண்டார்கள். உடனே அந்தச் செய்தி ஊரெல்லாம் பரவி விட்டது. எல்லாரும் நீராடித்திலகம் தரித்து அந்தப் பரதேசியைப் பார்க்கப்போனார்கள். அவர் முதலில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தார். தோட்டக்காரன் அவரிடத்தில் அன்பு பூரித்து "சாமி குளிர்பனி அதிகமாயிருக்கிறதே, இந்தக் குடிசையில் எழுந்தருளினால் ஏழைக்குச் சந்தோசமாயிருக்குங்க" என்று கேட்டுக் கொண்டான். அவனுடைய பக்திக்கு உவந்து பரதேசி அக்குடிசையில் இருந்தார். அவரைப் பார்க்க வந்த மகம்மதியர்கள் அவரைக் கபீர்தாஸ் என்றே சொன்னார்கள். ஹிந்துக்கள் "இல்லை; அவர் காசிவாசி இராமேசுவர யாத்திரை போகிறார்" என்றார்கள். அவர் கபீர்தாஸ் ஆக விருந்தாலும் சரி; காசிவாசியாகவிருந்தாலும் சரி; அவர் தெய்வபக்தர், பகவானுடைய மெய்யடியார்களில் ஒருவர் என்பது எங்கும் பிரஸித்தமாய்விட்டது.

ஏழைகள் கூட்டம் கூட்டமாகச் சென்று அவருடைய வரப் பிரஸாதத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

நோயாளிகள் தங்கள் நோய் தீர விபூதி கேட்டார்கள். பிள்ளைப் பேறில்லாத பெண் பெண்டாட்டிகள் பிள்ளைவரம் கேட்டார்கள். இங்கிலீஷ் படித்து விட்டு ஹிருதயசுத்தியில்லாமல் அஹம்பாவம் தடித்த சிலர் சாமியார் அடியாராயிருந்தால் அவருடைய தெய்விகமஹத்துவத்தை ஸித்திகளால் காட்டவேண்டுமென்று அவரை வம்புக்கிழுத்தார்கள். இன்னும் சில தர்க்கவாதிகள் தெய்வம் உண்டென்பதைப் பிரத்தியக்ஷப் பிரமாணங்களால் காட்டச் சொல்லி அவரை வாதுக் கிழுத்தார்கள்.

காசிவாசி பொருபரதேசி வேஷம் பூண்டிருந்தாரென்று சொன்னேமல்லவா! அவருக்கு இது வெல்லாம் பொருந்தொல்லை யாகவிருந்தது. கடைசியில் ஹிம்ஸை பொறுக்கக்கூடாமல் அவர் புருவமத்தியில் கண் பார்வை கூட, "ஹே! பகவன், இது என்ன கூத்து! உன் திருவருளால் துணி நெய்வோர் குலத்தில்பிறந்

தேன். ஏழையை இப்படி அம்பலத்தில் விட்டுப் பார்ப்பதேனோ! இந்தக் கூட்டத்தை யெல்லாம் என் வாசலில் கொண்டுவந்து விட்டு விட்டு நீர் நழுவி விடப்பார்க்கிறீரே! ஐயோ! நான் என்ன பிழை செய்தேன்!

"நன்றே செய்வாய்! பிழை செய்வாய்!
நானோ இதற்கு நாயகமே"

என்று மன முருகப்பாடலானார்.

அவ்வூரிலுள்ள வைதிகப்பிராமணர்கள் இவரிடத்தில் பொச்சாப்புக்கொண்டு, இந்தவேஷக்காரனைச் சந்தியிலிழுத்துவிட வேண்டுமென்று அதற்குத் தக்க சூழ்ச்சி செய்தார்கள்.

அவ்வூர் வைதீகர்களுக் கெல்லாம் மந்திராலோசனை சொல்லும் லௌகிக ப்ராமணன் ஒருவர் இருந்தார். அவர் பிராமணகுலத்திற் பிறந்து வைதிகாசாரங்களை யனுஷ்டிக்கிறவராகக் காட்டினாலும், ஜவுளி (துணி) வித்து ஜீவனம்செய்து வந்தார். வர்த்தகத்தில்கைதேர்ந்த ஆஸாமி. காசுசேர்ப்பதில் மிகு கெட்டிக்காரர். சேலை வியாபாரம் செய்கிறவராதலால் எல்லாவித ஸ்தீரீகளிடத்திலும் அவருக்கு வியாபார சம்பந்தம் உண்டு.

கருவிளம் முத்துகனப்பாட்டியும் பிராமண வர்த்தகரும் கலந்து பேசிக்கொண்டிருக்கக் காணப்பட்டார்கள்.

மறுநாட் காலையில் கபாலீவனத்தில் ஜனங்கள் ஏராளமாய்க்கூடி யிருந்தார்கள். பரதேசி வாயைத் திறந்தால் வில்லங்கமென்று கண்ணை மூடிக்கொண்டு சமாதியிலமர்ந்துவிட்டார். மூன்றுநாளாயிற்று. கண் விழிக்கவில்லை. அன்ன ஆஹாரம்இல்லை. முகம் மட்டும் ஜ்யோதி விட்டொளிர்ந்து கொண்டிருந்தது. ஜனங்களெல்லாம் பூஜாதிரவியங்களைக் கொண்டுவந்து பயபக்தியோடு அவரைப் பூஜை செய்து போனார்கள். இன்றைக்கு ஆருத்ரா நக்ஷத்திரமாகையால் ஜனங்கள் அதி விசேஷமாகக் கூடியிருந்தார்கள். பொழுது விடிந்தால் ஆருத்ராதரிசனம்.

ஜனங்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடிப் பரதேசியைப் பூஜித்தும் தரிசித்தும் சென்றார்கள். வந்து போய்க் கொண்டிருந்தவர்கள் போக அந்த வனத்தில் கூடியிருந்த கூட்டத்துக்கு அளவு சங்கையில்லை. இது விஷயம் ஸர்க்காருக்குத் தெரிந்து பந்தோபஸ்துக்காகச் சில போலீஸ்காரர்களை காவலிருக்க அனுப்பியிருந்தார்கள்.

மாலை மூன்று மணியிருக்கும்; கொத்தவால், மேஸ்திரேட்டு முதலிய அதிகாரிகளெல்லாம் இந்த அதிசயத்தைப் பார்க்க வந்திருக்கிறார்கள். கூட்டம் முன்னிலும் அதிகமாக நெருங்கிக் கூடியிருக்கிறது. சின்னக் கொத்தவால், ப்ரஹ்மஜ்ஞான சங்கத்தைச் சேர்ந்தவர். விசுவாமித்திரரைப் பொய்யனென்று கூறி ப்ரக்யாதி பெற்றவர். தெய்வோபாஸனாவித்தியிலும் தந்திரமார்க்கத்தில் அதிக நம்பிக்கையுடையவர். திருடரைப் பிடிப்பதில் கைதேர்ந்தவரெனப் பேர் பெற்றுப் பட்டமும் வாங்கினவர். உண்மைத்திருடர்களால் 'குருடரென்று' பட்டப் பேர்கொடுக்கப்பெற்றவர்.

பரதேசி ஸமாதி கலையாமல் தானே கோலங் குலையாமல் வீற்றிருக்கிறார். பூஜை நடக்கிறது. வாத்தியங்கள் ஒரு பக்கத்தில் முழங்குகின்றன. ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்து முடித்து ஜயஜயவென்று ஜயபேரிகை முழங்கவும் கண்கணரென்று கண்டாமணி யடிக்கவும் தீப ஆராதனை நடந்து வருகிறது. மங்களஹாரத்தியெடுக்கிறார்கள். ஜனங்களெல்லாம் 'ஹர ஹர' வென்று கன்னத்தில் போட்டுக்கொள்கிறார்கள்.

இந்த சமயத்தில் ஒரு பெண்பிள்ளை யோடி வந்து "ஐயோ என் பர்த்தாவே!" என்று கத்திக்கொண்டு கூட்டத்திலிருந்து மின்னற் கொடி பாய்வது போல் பாய்ந்து அவர் மேல் விழுந்து அவரைக் கட்டிக்கொண்டு பிரலாபிக்கலானாள் "என்னைப்பிண்டம்பெருங் காயமாகத்திண்டாட விட்டு விட்டு நீர் மட்டும் சாமியார் கோலம் கொண்டு வயிறு பிழைக்க

லாமா!" என்று அவரைக் கட்டிக்கொண்டு பிரலாபித்தாள். "கண்ணைத் திறந்து பாராயோ!" என்று அவர் கண்ணிமைகளை நீக்கிப்பார்த்தாள். விழிகளிரண்டும் திரிவேணி சங்கமத்தில் கூடியிருந்தபடியால் அவர் சமாதி கலையவில்லை.

அவர் சமாதியைக் கலைக்க அவளால் முடியவில்லை. ஜனங்கள் சிலர் அந்த ஸ்திரீயைத்திட்டினார்கள். சிலர் பரதேசியைத்திட்டினார்கள். மற்றவர்கள் ஸ்தம்பித்து நின்றார்கள். கொத்தவாலதிகாரிகளுக்கு முன்னே யாரும் அவளைப் பிரிக்க யத்தனிக்கவில்லை.

மேலே விழுந்த ஸ்திரீ கண்ணைத்துடைத்துக் கொள்பவள் போல் முந்தாணியை அவிழ்த்து அதிலிருந்து ஏதோ ஒரு மருந்தையெடுத்தாள். "ஐயோ, பர்த்தா மூர்ச்சையாய் விட்டாரே!" யென்று அவர் முகத்தில் அதைத் தடவி அவரைக் களைதீரச் செய்பவள்போல் வெகு சாமர்த்திய சாதுர்யமாய் அவர் சமாதியைக்கலைத்தாள்.

பரதேசி கண் விழித்திப்பார்த்தார். பரத்தை பதிவிரதை போல் புலம்பியழுதாள். பரதேசி உண்மையை ஓர்ந்துணர்ந்தார். "ஹே பகவன்! ஏழையேன் வார்த்தைக் கிரங்கினீரே!" என்று ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

சமீபத்திலிருந்த சில போக்கிரிக் கூட்டத்துப்பையல்கள் "ஹோ!" என்று கெக்கொலி கொட்டி "பெண்டாட்டி யாத்தாள் பெரியாத்தாள்!" என்று எல்லாரும் சேர்ந்து ஒரு குரலாய்க் கூச்சலிட்டார்கள்.

சின்னக் கொத்தவால், "பெண்டாட்டியை நினைத்துக்கொண்டு தபஸ் செய்தார். பெண்டாட்டி வந்து விட்டாள். தபஸ் பலித்து விட்டது!" என்று புன்முறுவல் செய்துகொண்டு செப்பலானார். கூட விருந்த பரிவாரங்களெல்லாம் கொத்தவாலுடைய சாமர்த்தியத்தைக் கொண்டாடிக் கொல்லென்று நகைத்தார்கள்.

பரதேசியோ தன்னை ஆலிங்கனம் செய்துகொண்ட ஸ்திரீயை உற்றுப்பார்த்தார். அவள் உடல் நடுங்கி உள்ளம் பதைக்க அவர் காலில் விழுந்து "ஸ்வாமி! நான் அபராதம்செய்தவளானேன்! ஆனால் இது என்னுடைய சங்கல்பமில்லை. வயிற்றுப் பிழைப்பு இப்படி யென்னைக் காட்டிக் கொடுத்து விட்டது. ஏழைமேலிரங்கி என் அபராதத்தை க்ஷமிக்க வேண்டு" மென்று அதிக வாக் சாதுர்யத்தோடு பேசினாள்.

"அப்படியா, சரி! நான்சாப்பிட்டுச்சுகிக்கும் போது நீ கஷ்டப்படுவானேன். என்னிடந் தானே சுகமாயிரு!" என்று விடையளித்தார்.

பரத்தையும் அவர் சொல்லைக் கடந்து நடக்க முடியாமல் தான் செய்த அபராதத்தை நினைத்து நினைத்து மனக்கிலேசங்கொண்டவளாகி ஆறாத்துயரால் அவள் நெஞ்சம் உருக, ஸ்வாமியாருடைய திருவருளைச் சிந்தித்துக் கொண்டு அவருக்குப் பணிவிடைசெய்து கொண்டிருந்தாள்.

ஜனங்களெல்லாரும் "பரதேசி குட்டு வெளியாயிற்று!" என்று சொல்லிக்கொண்டு அவரவர்கள் இருப்பிடம் சென்றார்கள்.

பரதேசியைப் போஷிப்பாரில்லாமற் போகவே, அவர் பூர்வம்போல் நூல் வாங்கித் துணி நெய்து அதைவிற்று ஜீவனம் செய்வாரானார்.

பிரதிதினமும் பரத்தை அவர் காலில் விழுந்து "ஸ்வாமி என் அபராதத்தை மன்னிக்கவேண்டும். என்னைச்சபிக்க கூடாது. நான் அறியாமற் செய்த பிழையைப் பொறுக்க வேண்டும். வேசைத்தொழிலில் பிரவேசித்திருந்தால் இந்த அபராதம் செய்ய நேரிட்டது. ஸ்வாமி என்னைப் புனிதையாக்க வேண்டும்!" என்று அழுது தொழுது வந்தாள்.

"பெண்ணே நீ உண்மையைச்சொன்னதால் உன் அபராதத்தை மன்னித்து விட்டேன். வாய்மையால் அகம் தூய்மையாம். இன்று முதல் சொப்பனத்திலும் பொய் சொல்லாதே! உன் பாபமெல்லாம் நசித்துப்போம்!" என்றார்.

"ஸ்வாமி! அடியாளைப் புறக்கணித்துத் தள்ளாது திருச்சமுகத்தில் தானே யிருந்து திருத்தொண்டு செய்து வர ஆஞ்ஞையாக வேண்டு" மென்று இருகைகளையும் கூப்பிப் பிரார்த்தித்துக் கொண்டாள்.

"அப்படியே!" யென்றார் பரதேசி. இப்படிச் சில காலம் கழிந்தது. பரத்தையான வேசி ப்ரஸித்தி பெற்ற தாஸியானாள்.

(தாஸி யென்றால் பணிவிடைப் பெண்,)

பரதேசியான காசி வாசி ப்ரஸித்தி பெற்ற வாணிபரானா. தாஸிப்பெண்ணும் அஹத்தூய்மைபெற்று பக்தியிற் சிறந்தவளானாள். இரவும்பகலும் நூலோட்டிக் கொண்டு பகவானைக் குறித்துப் பாடுவதே தொழிலாயிருந்தாள். அஹத்தூய்மை விருத்திக்க விருத்திக்க அவளுடைய குரல் கனிந்து நவரஸமொழுக பக்திரஸம் நிறைந்திருந்தது. அவளுடையகுரலோசை குயிலைப்பழித்தது. காசிவாசி துணி நெய்து விற்று பகவன் நாமஸங்கீர்த்தனம் செய்து கொண்டு காலந்தள்ளி வந்தார்.

வரவர இவருடைய ஸங்கீர்த்தனம் ஜனங்கள் உள்ளத்தைக் கவர்வதாயிற்று. மனக்கிலேசமுற்றவர்களெல்லாம் கபாலீவனத்தண்டை சென்று இவரது பகவன் நாம ஸங்கீர்த்தனத்தைக் கேட்டு ஆறுதலடைந்து வந்தார்கள்.

காலக்கிரமத்தில் இவருடைய கீர்த்தி தேசமெல்லாம் பரவி அரசன் காதிலும் விழுந்தது.

ஒரு நாள் தேசாதிபதி காசிவாசியினுடைய ஸங்கீர்த்தனங்களைக் கேட்க வேண்டுமென்று விரும்பி அவரைத் தன் ஸமுகத்துக்கிட்டுவரும்படி கட்டளை யிட்டார்.

ராஜ தூதர்கள் வந்து சங்கதியைச் சொல்லி காசிவாசியை ராஜ ஸமுகத்துக்கு வரும்படி அழைத்தார்கள்.

காசிவாசி தான் ராஜ பேட்டிக்கு அருகனில்லை யென்று ஆக்ஷேபித்தார்.

தங்களையழைத்துப் போகாமல் திரும்பினால் எங்களுக்குத் தலைபோய்விடுமென்று தூதர்கள் மன்றாடினார்கள். "ஆனால் வருகிறேன்" என்று காசி வாசி தாஸிப்பெண்ணோடு புறப்பட்டுவந்தார்.

அரசர் கொலு வீற்றிருக்கிறார். மந்திரிகளும் பிரபுக்களும் ராஜ சபையில் வந்து நிறைந்திருக்கிறார்கள்.

ஹரிக்காரர்கள் காசிவாசியை யிட்டுக்கொண்டு போய் கொலு மண்டபத்தின் வாசலில் நுழையவிட்டு ஒதுங்கி யிருந்தார்கள்.

காசிவாசி ராஜசபையிற் சென்றார். அவர் பின்னே நிழல் போலும் அந்த தாஸிப்பெண் சென்றாள்.

சிலர் இதைப்பார்த்து நகைத்தார்கள். சிலர் கனைத்தார்கள். சிலர் கோபங்கொண்டு கொதித்தார்கள்.

அரசர், காசிவாசி தாஸிப்பெண் ஸமேதராய் தன்முன் வருவதைப்பார்த்து, "ஆ! இதென்ன வெட்கக்கேடு" என்று நினைத்தார். உடனே அவருடைய குறிப்பறிந்து காவலர்கள் அவர்களைச் சபையினின்று வெளிப்படுத்திக்கொண்டு போய் விட்டார்கள்.

தெருவில் கூடியிருந்த பிராமணர்கள் "ஹோ!" வென்று கைகொட்டிச் சிரித்தார்கள்.

அவர்கள் தனக்கு அபயங்கொடுத்து ரக்ஷித்துத் தன்னைப் புனிதையாக்கிய பரமதயாளுவைப் பரிகாசம் செய்து கெக்கலி கொட்டியது அந்தப் பெண்ணின் ஹிருதயத்தைத் துளைத்துக்கொண்டு சென்றது. அதனாலுண்டான துக்கம் பொறுக்காது அடியற்ற மரம்போல் அவள் அந்த பாகவதர்காலில் விழுந்தாள். அவர் காலைப் பிடித்துக்கொண்டு "ஓ பரம தயாளமூர்த்தியே! நரகத்துக்குச் சமானமான பாபக்குழியில் வீழ்ந்து கிடந்த பாபியான என்னைப் பரங்கருணை மிகுதியால் கைதூக்கிவிட்டுப் புனிதையாக்கித் தங்களுடைய மாசு மருவற்ற கீர்த்தியைப் பாழாக்கிக் கொண்டீர்களே! தங்கள் திருப்புகழுக்கு இகழ்விளைத்த என்னைத் தெய்வம் எப்படி ரக்ஷிக்கும்!" என்றழுதாள்.

காசிவாசி அவனைத் தூக்கி யெடுத்து, 'பகவான் கொடுத்த நன்கொடை நீ!'' யென்று பகர்ந்து,

"தாழாமல் தாழ்த்தி யென்னை
தர்மந்தலை யெடுக்க வென்றே
வாழாமல் வாழவைத்த
வள்ளலையே துதிப்பேனித்தம்!
வீழாமல் வீழ்ந்து நித்தம்
வேதியர்கள் மனங்குளிரப்
பாழா மிவ்வுலகை விட்டே
பணிந்துழைக்க வரந்தருவாய்''!

என்று பாடிக்கொண்டு நந்தனர் சிதம்பரத்தில் பிரவேசித்தது போல் எல்லாம் திருவம் பலமாகக் காசிவாசியும் வேசிதாஸியும் உள்ள முருகப் பாடிக்கொண்டு சென்றனர்.

அக்குரல் கேட்டு அரசனும் திடுக்கிட்டு "ஆ!என்னகுரலிது!ஓஹோ! வந்தவர்களுடைய தெய்வத்தன்மை யுணராது வீண்கர்வங்கொண்டு மதிமோசம் போனேனே!'' யென்று தனக்குள் தானே வருந்திக் கொண்டு சரேல் என்று கொலுமண்டபம் விட்டு அந்தப்புரம் சென்றான்.

---

## "NECESSITY KNOWS NO LAW."

## "ஆபத்துக்கு தோஷமில்லை"

தர்மம் ஸநாதநமென்றும் ஸ்வபாவ தர்மமென்றும் இருவகைப்படும். ஸநாதனதர்மம் ஒருபோதும் மாறாது. அதை மாற்றவும் முடியாது. ஈசுவரனாலும் அதற்குக் கட்டுப்பட்டேதான் நடக்கவேண்டும். ஸ்வபாவ தர்மம் என்பது அப்படியல்ல. காலதேச வர்த்தமானங்களுக் கேற்றபடி அது மாறிவரும். அதற்கு இயற்கைதர்மமென்றும் பேர். பசியால் பிராணன் போகும் ஸ்திதியிலிருப்பவன் அகப்பட்டதைப் புசித்துப் பிராணனைக் காப்பாற்றிக்கொள்வது இயற்கை தர்மம். பசியை வென்று நசியாமருந்தளிக்கும் பரம ரஹஸியத்தால் பசிதாஹத்தின் கொடுமையின்றி சுகானுபவம் வித்திக்க இருப்பது ஸநாதநதர்மமாகும். ஸநாதநதர்மம் ஆத்மார்த்த மானதாய் ஆத்ம சக்தியையுடையதாயிருப்பதால் அதற்கு 'ஆபத்து' என்பதே கிடையாது. அது எப்போதும் பரிபூரணமாய் பரம ஸாதகமாயிருப்பது. அந்த நித்தியமான தர்மம் கால தேச வர்த்தமானங்களைக் கடந்துள்ளது. ஆத்மாவுக்கு எப்படி நாசமில்லையோ, அப்படியே ஆத்மதர்மமாகிய ஸநாதனதர்மத்துக்கும் நாசமில்லை. அதைக்காப்பாரும் அழிப்பாரும் இல்லை. அப்படியே குறைவு நிறைவென்கிற பேதமுமில்லை. பிரஹ்லாதன், துருவன் முதலான பாலர்கள் பட்டபாடுகளெல்லாம் அவர்கள் கடைப்பிடியாகக் கைக்கொண்ட ஸநாதநதர்மத்தால் அவர்களைப் பாதிக்கா தொழிந்தன. அவர்கள் தகப்பனரியற்றிய கொடுமைகளெல்லாம் அவர்களுக்கு முடிவில் அஹிதமாயின்றி ஹிதத்தையே உண்டுபண்ணிற்று.

ஸ்வபாவ தர்மம் என்பது அப்படியல்ல. அது காலதேச வர்த்தமான பேதங்களை யொட்டி யுள்ளதால் காலதேச வர்த்தமான பேதங்களுக்குத் தக்கபடி அந்த தர்மமும் பேதப்படும். ஆசார அனுஷ்டானங் களெல்லாம் கால தர்மத்தை யொட்டி நிற்கும். தன்னைக் கொல்லவந்த ஒருவனைத் திருப்பிக்கொல்வது தர்ம விரோதமாகாமல் துஷ்ட நிக்ரகமாவது கால தர்மத்தை யொட்டியே யன்றி வேறல்ல. காலம் பாவனமாத்திரத்தா லுண்டாவது. மூர்ச்சித்து விழுந்தவனுக்கும் அயர்ந்து நித்திரை போனவனுக்கும் கால வுணர்ச்சியில்லை. மனுஷன் பாவனஸஹிதனயிருக்கு மளவில் பாவனதர்மத்தை யனுசரித்தே யிருக்கும் அவன் செய்கைகளெல்லாம். நினைப்பதொன்றும் சொல்வது மற்றொன்றும் நடப்பது வேறொன்றுமாக விருப்பதெல்லாம் பாவன விரோதத்தாலுண்டாகிறது. பாவன விரோதமாவது ஒன்றை நினைத்து உடனே அதற்கு விரோதமான வேறொன்றை நினைத்தலாம். முன்பாவத்துக்குப்பின்பாவம் விரோதமா யிருப்பதால் வாக்கும் நடத்தையும் தடுமாறித் தட்டுக் கெட்டுப்போகிறது, கர்ம தர்மம் உணரா

மல் சிந்திப்பவன் கர்ம பெந்தத்துக் குள்ளா வான். அதிலும் வர்மம் பாராட்டுகிறவன் "தன்வினை தன்னைச்சுடும்" என்கிறபடி தனக் குத்தானே தீமை விளைவித்துக் கொள்கிறன். இப்படி வரும் கேடுகளுக்கு நிவாரணமில்லை. அனுபவித்தே தீரல்வேண்டும். ஆபத்து என் பது ஸ்வபாவ தர்ம விரோதமாக வரும் காரி யங்களுக்கே யன்றி வினைப்பயனுய் வரும் கேடுகளுக்குப் பொருந்தாது. இந்த ஆபத்து ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், அத்யாத்மி கம் என மூவகைப்படும். முன்னது பாம்பு, புலிபோன்றவைகளால் வரும் ஆபத்து. பின்னது பஞ்சம், கொள்ளைநோய், வெள் ளம் பொன்றவையால் வரும் ஆபத்து. அத் யாத்மிகம் என்பது உள்ளக்கொதிப்பால் உண்டாகும் ஆபத்து. இந்த ஆபத்துக் கால ங்களில் நிவர்த்தி தர்மம் ஒன்றே செல்லும். மற்றப்படியுள்ள விதிவிலக்குகள் மனதைக்கட் டுப்படுத்தா. ஆபத்துக்கு தோஷமில்லை யென் பதற்கர்த்தம் இதுவே.

---

## EASY TALKS ON HEALTH CULTURE.

CAUSE, PREVENTION AND CURE OF DISEASE.

"Self-knowledge which should be the foundation of all education, is the one thing which is left out of the average curriculum. If the child learns in a practical, rational way he must do so outside the school. This should not be, and I am glad that the public is awakening to the fact. I am not a pessimist and I do not want to talk pessimism, but I do want to talk straight so you will consider these matters and join in the efforts for a better, nobler and a hardier race."—Dr. Herman C. Menkel * (the Good Health League of London.)

* The doctor is an optimistic exponent of the great fundamental laws underlying our physical well-being holding that Nature has placed within the body certain protective agencies which if rightly co-operated with will not only keep the body in better working condition, but also add to the period of one's active usefulness.

## சுகஜீவ ஸாதன ஸம்பாஷணை.

வியாதியின் காரண், மாரண, பரிசாரங்கள்.

பீடிகை.

குழந்தைகளே! உங்களோடு நான் இப்பத் திரிகை மூலமாய் ஸம்பாஷணை செய்ய விரும்பு கிறேன். எனக்கு சுபாவமாகவே குழந்தை களிடத்தில் அதிக பிரியம் உண்டு. ஏனென் ருல் நான் குழந்தையாக விருந்தபொழுது என் தமக்கை யென்னிடத்தில் அதிக பிரிய மாயிருந்தாள். பிரிய சுகத்தை யனுபவித்த வர்கள் அதை யிழக்கும் துக்கத்தைச் சகியார் கள். பிரியம் என்பது பாத்திரமுள்ள இடத் தில் தான் தங்கும். அபாத்திரர்களிடத்தில் வைக்கும் பிரியம் அவரிடம் தங்காது. பூர்வம் உண்டான விடத்துக்கே திரும்பி வந்துவிடும். இது நித்தியானுபவத்தில் சகஜமாய் காணக் கூடியது. பீடிகையாகச் சொன்னது இவ்வளவு போதும். இனி எதைப்பற்றிப் பேசலா மென்பதைப்பற்றிச் சொல்கிறேன்.

தேஹாரோக்கியம், தாமரைமலர் உவமானம்.

நீங்களெல்லாரும் குழந்தைகள். உங்கள் தேஹம் இளந்தளிர்போல் மிருதுவான சுபாவ முடையது. வர்ணமும் மேனியும் நலமாகப் பொருந்தியுள்ளது. உங்களைப் பெற்ற தாய் தகப்பன்மார்கள் உங்களை நாளொரு வண்ண மும் பொழுதொரு மேனியுமாக வளர்த்து பால் வடியும் உங்கள் திருமுகத்தைக் கண்டு சந்தோ ஷிக்கிருர்கள். "குழந்தை முகங்காண கோடி கவலைதீரும்" என்பது பழமொழி. குழந்தை முகத்தில், கோடிகவலையுள்ள மனக்கிலேசத் தையும் ஆற்றத்தக்க வசியமருந்து என்ன உள்ளது? குழந்தைமுகங்காண கோடிகவலை தீர்வது எப்படி? இதற்கு மறுமொழி கூறுவது மிக கஷ்டம். ஆனல் உண்மை என்னவோ வெகு சுலபம். "அகத்தின் அழகு முகத்திலே தெரியும்." இந்த அகத்தழகு தாமரைமலர் போல் ஹிருதயம் பரிசுத்தமாயுள்ள வரையில் தான் பிரகாசிக்கும். ஹிருதயசுத்தம் கெட் டால் அகத்தழகும் கெட்டுப்போம். இது

உண்மை. தெரிந்ததா! இந்த அகத்தழகை முகத்தில் காணும்போது கண்டோர் அஹம் (ஹிருதயகமலம்) மலர்கிறது. கமலம் (தாமரை மலர்) மலர்கிறது சூரியனைக்கண்டபோது தான். சூரியோதயத்தில் சூரியப்பிரகாசம் பட்டு மலரும் தாமரை சூரியாஸ்தமனத்தில் பிரிவாற்றாதது போல் குவியும். தாமரைப்பூ மலர்வதற்கும் குவிவதற்கும் காரணம் சூரிய வெளிச்சம் என்பதை நீங்கள் நேரில் பார்த்து கண்ணாரக் கண்டறிய வேண்டியது. இதை நான் சொன்னேனே யென்று நேரில் பார்த்தறியாமல் நம்பிவிட்டீர்களானால் மோசம் வரும். "ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று கேட்டிருப்பீர்களே. ஏட்டிலே சுரைக்காய் மாதிரி அழகாய் சித்தரம் எழுதிப்பார்த்தால், பார்வைக்கு மட்டும் அது தோற்றமாகுமேயன்றி பிரயோஜனார்கமாகாது. அப்படியென்றால் அந்த ஏட்டுச்சுரைக்காய் காரியத்துக்குதவாது. சுரைக்காயைப் பார்த்து அதன் உருவத்தையும் வர்ணத்தையும் மட்டும் அறிந்து கொண்டால் போதாது. அதைக்கறி செய்து (பக்குவமாய் சமைத்து) சாப்பிட்டுப் பார்த்தால் தான் அதன் குணம் தெரியும். அப்படிப்போல நீங்கள் பள்ளியில் படிக்கும் ஒவ்வொரு விஷயமும் வாத்தியார்சொன்னார் தெரியும்;புத்தகத்தில் படித்தேன் தெரியும்; என்று சொன்னால் போதாது. அந்தப்படிப்பு காரியத்துக்குதவாது. அப்படியென்றால் நீங்கள் பெரியவர்களானபிறகு உலகத்தில் ஜீவனந்தேடிப் பிழைக்க ஆரம்பிக்கும் பொழுது அது உங்களுக்கு பிரயோசனப்படமாட்டாது. கல்வி யென்பது "உற்ற விடத்துதவி" யாயிருந்து கைகொடுக்கும் ஒரு பரமஸாதகம். இதை வித்யை என்றும் வித்யேசுவரி யென்றும் ஸரஸ்வதி யென்றும் தொழுவதற்குக்காரணம இதுதான். பிள்ளையைத்தாய் பாலூட்டி வளர்ப்பது போல், மாசுமருள்படியாத குழந்தைமனத்தை வித்யேசுவரி ஞானப்பாலூட்டி வளர்த்து பரம பிதாவாகிய கடவுளிடம் கொண்டு விடும் தாய்பாக விருக்கிறாள். இந்த வித்யேசுவரி தாமரை மலர் போலும் சுத்த ஹிருதயம் வாய்ந்த தேஹத்தை க்ஷேத்திரமாக (இருப்பிடமாக) உடையவளாதலால் இவளைத் தாமரைமலரிலிருந்துண்டான வளாகச் சொல்லுவர் பெரியோர். படங்களிலும் கமலத்திலிருந்துண்டான வளாக எழுதிக்காட்டுவர். உண்மையாய் சுத்த ஹிருதயம் வாய்ந்த குழந்தைகள் தேஹத்தைத் தவிர அந்த தேவதைக்கு வேறு உறைவிடமில்லை. இதை நான் ஸ்வானுபவமாய்க் கண்டனுபவித்து உள்ள துள்ளபடி சொல்லுகிறேன். நான் சொல்வது ஸத்தியம். இதை நம்புங்கள். இப்பொழுது நம்பினீர்களானால் தினேதினே இதை யனுபவத்தில் சிறுகச் சிறுக ஆய்ந்துணரலாம். இந்த நம்பிக்கையில்லாவிட்டால் ஆய்ந்துணர ஆதாரமொன்று மில்லாமற் போகும். ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது. வாஸ்தவந்தான். ஆனால் கூரையில் காய்த்துக்கிடக்கும் சுரைக்காயைப்பார்த்து அதன் குணமறிய வேண்டி அதைப்பறித்துக் கறிசமைத்துச் சாப்பிட்டு பார்க்கவேண்டுமென்கிற எண்ணம் உதிப்பதற்கு அது ஆதாரமாயிருக்கிற தல்லவா? அது போல, உலக சம்பந்தமான உண்மைகளை உபதேச மூலமாக பெற்றோர், வாத்தியார், அரசன், குரு இவர்கள் சொல்லச் சிரவணத்தால் கேட்டு, மனனத்தால் ஆய்ந்து, நிதித்தியாஸனத்தால் அதன் உண்மை யுணரல்வேண்டும்.

சிரவணம் அல்லது கேள்வி (Power of Attention or the Secret of giving ear) என்பது பிரியவசத்தனைய் ஆவலோடு கவனிக்கும் சக்திக்குச் சொல்கிறது. இது இல்லாவிடத்துப் படிப்பேவராது படித்தும் அனர்த்தத்தை விளைக்கும். (கேள்வியில் மற்ற இந்திரியங்களால் உணர்வதும் அடங்கும்.)

மனனம் (வேள்வி) (Mental Grasp or Grappling with the Question) என்பது காது (இது பஞ்சேந்திரியங்களையும் உணர்த்தும் காரணக்குறிப்பேர்) முதலான இந்திரியங்

களால் (Senses) வேள்விக்கிரமமாய் கிரகித்து மனதில் வாங்கிக்கொண்டதை, (மாடு புல்லைத் தின்று அசைபோடுவது போல்) பிரத்தியாஹாரத்தினுல் அந்தர்முகப்பட்டமனதில்(இதை 'மனதிற்குள்தானே' யென்று சாமான்யமாகச் சொல்லுவர்)திருப்பித்திருப்பி அதன் அர்த்தாநர்த்தங்களையெல்லாம் நன்ருக ஆய்ந்தோய்ந்து பார்த்துத்தேறல்:—பதார்த்தத்துக்கு வாச்சியார்த்தம் இன்னதென்று திடப்படல்.

நிதித்தியாஸநம் (Assimilation) என்பது இந்திரியங்களால் கேட்டு மனத்தால் கிரகித்துணர்ந்ததை சந்தேக விபரீதமயக்கங்களற்ற (சுரைக்காய் கறி செய்து சாப்பிடுவதொத்த) நித்தியானுபவத்தில் உண்மைகடைப்பிடித்து அனுபவஞானமாகச் செய்து கொள்ளல்.

இந்த மூன்று விதமான சோபானமுறையின்றி எதையும் யாராலும் அறிய முடியாது. பீஜத்தில் (வித்தில்) மரம், வேர், பலன் (கனி)யென மூன்றும் அடங்கியிருப்பதுபோல் 'அறிவேன்' என்கிற சப்தத்தில் இம்மூன்று படிகளும் அடங்கியே யிருக்கும்.

அறிவேன் என்னும் சப்தத்தில் 'அறிவான்' (மாணுக்கன்); அறிபொருள் (வாத்தியார் உபதேசம்); அறிவு (வாத்தியார் உபதேசபலன்). இதற்குத் திரிபுடி ஞானம் என்றுபேர், உலக ஞானமெல்லாம் இதிலடங்கும். இது மூன்று பாகமாகப்பிரிவுபட்டு ஒன்றுகூடி விளங்குவதால், இந்த திரிபுடிஞானத்தால் அறிவதற்கெல்லாம் "கலைக்ஞானம்" என்று பேர். கலை என்ருல் பிரிவு, கிரணம். வித்தையின் கலைகள் 64. இந்த 64-கலைகளில் தேஹதத்துவம் ஒன்று.

தேஹதத்துவம் = தேஹத்தின் உண்மை.

"தேஹம்" என்ருல் தஹிக்கப்படத்தக்கது: அதாவது அழிந்து போகத்தக்கது என்று அர்த்தம். தத்துவம் = அது நீ. தத்துவம் என்ருல் "அது நீ யாதல்" தர்மம். அது என்பது அழியாதவஸ்து. நீ யென்பது காலதேசபரிச்சேத பேதங்களால் பரிணமித்து உருவெடுத்தது. அழியாத வஸ்துவுக்கும் அழியுந்தன்மையதான உருவத்துக்கு முள்ள உறவை (Relation) க்காட்டும் 'தாதாத்மியசக்தி' காரியங்களுக்கு 'தத்துவம்' என்றுபேர். அதையே தமிழில் உண்மை (உள்ளதான நிலைமை அல்லது உள்ள தன்மை) என்பர்.

'தாதாத்மியசக்தி' யென்ருல் 'அதுவதுவாதல்'. உதாரணமாக, மண்ணுகிய காரணவஸ்து ஒன்று தானே குடம் முதலான பல வேறுபட்ட நாமரூபங்களுடைய பாண்டங்களாகிறது. இங்கே மண் அழியாத வஸ்து; சட்டி பானை, குடம் அழியும் வஸ்துக்கள். அழியாத அந்த மண்தானே அழியும் உருவமுடைய சட்டி பானை குடம் முதலியவையாதல் "அது வதுவாதல்". அழியாத வஸ்துவாகிய ஆத்மா (அறிவு) அழியும் தோற்றங்களாகிய நாமரூபப் பிரபஞ்சமாதற்கு 'தாதாத்மிய சக்தி' யென்று பேர். தேஹதத்துவம் என்ருல் அழியுந்தன்மையதான தேஹத்துக்கும் அழியாத வஸ்துவாகிய அதன் காரணத்துக்குமுள்ள உறவை விளக்கும் உண்மை அல்லது தர்மம் என்று அர்த்தம் கொள்ளும்.

ஆரோக்கியம் என்ருல் அரோகமாயிருக்குந்தன்மை. அதாவது ரோகமின்றியிருக்கும் ஸ்திதி.

அரோக திடகாத்திரமா யிருப்பதே தேஹாரோக்கியம்.

குழந்தைகளே! நீங்கள் பெற்ருேர் பெரியவர்களுக்கு நமஸ்காரம் செய்யும் போதெல்லாம் அவர்கள் ஆசீர்வாதம் செய்வதைக்கேட்டிருப்பீர்களே. சாஸ்திரம் படித்தவித்வானுயிருந்தால் "அரோகதிடகாத்ரனுய் சுகஜீவியாய் தீர்க்காயுஸோடிருக்க வேண்டும்" என்று ஆசீர்வதிக்கக் கேட்டிருக்கலாம். அம்மாள், பாட்டி, அத்தை முதலானவர்கள் "நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுமாய், என்றும் பதினுருய் மார்க்கண்டனைப் போலிருக்க வேண்டும்" என்று வாழ்த்து கூறுவதைக் கேட்டிருப்பீர்கள். இதைவிடப் பெரிய பாக்கியம் உங்களுக்கு வேறில்லை. ஆனல் இதன் அர்த்தம் என்ன வென்று நீங்கள் யோசித்து விசாரித்ததுண்டோ சொல்லுங்கள்.

## SKETCHES OF VILLAGE LIFE.

### I. THE HEADMAN, THE ACCOUNTANT AND THE WATCHMAN.

*('From Life in an Indian Village.')*

### கிராம வாச விசித்திர விலாஸம்.

**1. நாட்டாமை, கணக்குப்பிள்ளை, தலையாரி.**

இச்சென்னை ராஜதானியில் சுமார் 55,000 கிராமங்கள் இருக்கின்றன. இவ்விராஜதானியில் வசிக்கும் மூன்று கோடியே பத்து லக்ஷம் (31,000,000) ஜனங்களில் இரண்டு கோடியே எண்பது லக்ஷம் ஜனங்கள் கிராமங்களில் வசிக்கின்றார்கள். நூற்றுக்குப் பத்துஜனங்கள் தான் நாகரிகமான பட்டணங்களில் வசிக்கிறார்கள். நூற்றில் மீதி தொண்ணூறு (90) ஜனங்களும் கிராமங்களில் வசிப்பவர்கள். இருக்கும் ஐம்பத்து ஐயாயிரம் கிராமங்களில் ஒன்றான கீழம்பாக்கத்தை எடுத்துக்கொள்வோம். இக்கிராமம் தென்னிந்தியாவின் தேச சரித்திரத்தில் முக்கியமான செங்கல்பட்டு ஜில்லாவில் இருக்கும் காஞ்சிபுரத்திற்கும் மஹாபலி அல்லது மாமல்ல புரம் எனப்படும் க்ஷேத்திரத்திற்கும் நடுவில் இருக்கிறது.

கி. பி. 500-வது வருஷம் வரையில் பலவந்தர்களாயிருந்த பல்லவ அரசர்கள் சாளுக்கிய அரசர்களோடு எப்பொழுதும் யுத்தம் செய்துக்கொண்டிருந்தார்கள். இந்த யுத்தங்களில் கீழம்பாக்கம் அழிக்கப்பட்டது. பூமி பயிருக்கு உத்தமமாய் இருந்தும், பாலாறு நதியானது அதற்கு நடுவில் ஓடி நிலம் செழிப்பாய் இருந்த போதிலும் பயிரிடுவாரில்லாமல் பாழாய் இருந்தது. கி. பி. 1050-ம் வருஷம் குலோத்துங்க சோழனின் குமாரன் அடங்கை சோழன் யுத்தத்தில் வெற்றி பெற்று காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்கொண்டு அமைதியாக அரசாளத் துவங்கினபின், ஜனங்கள் கீழம்பாக்கத்தில் குடியேறத் தொடங்கினார்கள். கீழம்பாக்கம் முன்னூறு வேலி நிலமும் ஐம்பது, அறுபது வீடுகளும் முன்னூறு ஜனங்களும் உடையது. அக்கிராமத்தில் துளுவ வேளாளர்கள் மிகுந்த மதிப்பு உடையவர்கள். துளுவவேளாள குலத்தவரான கோதண்டராம முதலி அங்கே கிராம முனிசிப். அக்கிராமத்தில் அவருக்கு ஐம்பது வேலி நிலம் சொந்தம். அவர்களது முன்னோர்கள் வீரசைவர்கள். பன்னிரண்டு, பதின்மூன்றாவது நூற்றாண்டுகளில் ஸ்ரீ இராமானுஜாசாரியார் உபதேசிக்க ஆரம்பித்தபொழுது கோதண்டராம முதலியின் முன்னோர்கள் வைஷ்ணவ மதத்தைத் தழுவி வைஷ்ணவர்களானார்கள். கோதண்டராமமுதலியின் முன்னோர்களில் ஒருவர் கோதண்டராமர் கோவில் கட்டினார். அக்கோவிலின் ஸ்வாமி பெயர் தான் கோதண்டராம முதலிக்கு கொடுக்கப்பட்டது. கோதண்டராம முதலியால் தான் கிராமத்தின் முக்கியமான காரியங்களெல்லாம் நடத்தப்படவேண்டும். கோதண்டராமமுதலிக்கு சிறு தொகை விவில் வழக்குகளையும் அடிதடி, களவு, முதலிய கிரிமினல் வழக்குகளையும் விசாரிக்க அதிகாரமுண்டு. குற்றவாளிகளுக்கு அபராதமும் சில மணிநேரம் சிறைவாசமும் விதிக்கலாம். சிறைவாஸத்திற்கு, இங்கு இருப்பது போல் ஜெயில்கள் கிடையாது. ஆனால் அப்படி இரண்டு அல்லது மூன்றுமணி நேரம் விதிக்கப்பட்ட குற்றவாளி ஜனங்கள் பார்க்கப்படும்படியான இடத்தில் நிறுத்தி வைக்கப்பட்டு கிராம தலையாரியால் காவல் கார்க்கப்படுவான். குற்றவாளி பறையனாயிருந்தால் அவன் கையை அல்லது காலை ஒரு பெரிய மரக்கட்டையில் விடச்சொல்லி கையை எடுக்க முடியாமல் ஆப்பைகளினால் அடித்து விடுவார்கள். இதற்குப் பேர் தொழுக்கட்டை யிலிடுவதென்பர். ஆனால் இவைகள் வெகு அபூர்வமாக நடக்கும்.

கோதண்டராமமுதலி உத்தமர், தயாளு. காஞ்சிபுரத்திற்கும் மஹாபலிபுரத்திற்கும் போகும் வழியில் தங்குவதற்காக சிவன் கோவிலுக்கருகில் கீழம்பாக்கத்தில் ஒரு சத்திரம் இருக்கிறது. கோதண்டராம முதலி அந்த சத்திரத்தில் வந்து தங்குகிறவர்களுக்கு

அன்னம் போடுவதற்கான எற்பாடுகளைச் செய்து அவைகள் சரிவர நடந்து வருகின்றனவா என்று தானே நேரில் போய் கவனிப்பார்.

கோதண்டராம முதலிக்கு அடுத்த படியிலுள்ளவர் கர்ணம் ராமஸாமிபிள்ளை. இவரைத்தான் கிராமம் கணக்குப்பிள்ளை என்று சொல்லுவது. ஊரார் கடிதம் எழுதவேண்டுமென்றாலும் பத்திரங்கள் எழுத வேண்டுமென்றாலும் ராமஸாமி பிள்ளையைத்தான் கூப்பிடுவார்கள். ராமஸாமி பிள்ளை கிராமத்தில் வலுத்தகையானாலும் கபடி. கர்ணம் எவ்வளவு நல்லவராயிருந்த போதிலும் கிராமத்தின் ஜனங்கள் "கள்ளனை நம்பலாம், குள்ளனை நம்பலாம், கணக்கன் பிள்ளையை மாத்திரம் நம்பக்கூடாது" என்று சொல்லுவார்கள். "காக்காக்குஞ்சை நம்பினாலும் கர்ணன் குஞ்சை நம்பாதே" யென்பது பழமொழி. கணக்கப்பிள்ளைக்கு அடுத்த பதவியிலிருப்பது தலையாரி முத்து நாயக்கன். நகரங்களில் போலீஸார் செய்யும் வேலையை செய்யவேண்டியது தலையாரியின் கடமை. முத்துநாயக்கர் பலசாலி. இரவுகளில் கிராமத்தை ரோந்து (Round) சுற்றுவதும், அறுபபுக்காலங்களில் வயல்களை காவல் கார்ப்பதும், கிராம முனிசிப் வரிகளை வசூல்செய்து பொக்கிஷதாருக்கு அனுப்பும்பொழுது பொக்கிஷத்தின் பின்னால் காவல் கார்த்துக் கொண்டு போவதும் முத்துநாயக்கனின் கடமை.

---

## EAST AND WEST, OR SPIRIT AND MATTER.

"The West is growing tired of mere logical thought or mere political energy.' And the new Renaissance from the East, he thought, was flooding the West with a renaissance that brings with it a unifying spiritual principle. It seemed that the creator of Sakuntala had said to himself: "I can be as subtle and as lofty as I like, and the people will go with me." No country in the world save India could have given Kalidasa an audience. And India was the land of one of the eternal races of the world. Governments passed; what did not pass was the eternal race. For himself he had never urged any of his countrymen to avoid politics; a people must have its politics, but it must also have its seers, its poets, who are thinking not only of what is to happen to-morrow but of what may happen a century hence. It was their task to express and to preserve the national ideas; and the people which was able to keep the spirit alive could build up and possess whatever it wished. "Make the water boil strongly enough: that is all necessary." Everything else would follow.—*Mr. W. B. Yeats.*

## இந்திரனும் விரோசனனும்.

"அறிவு—அறியாமை" ஒரு கதை.

பிரஹ்மபுத்திரராகிய பிரஜாபதிக்கு இரண்டு புத்திரர்கள் உண்டு. அவர்கள் பேர் இந்திரன், விரோசனன். இவர்கள் இருவரும் ஞான தீக்ஷை பெறவேண்டி பிரஜாபதியைத் தேடியடைந்து பிதாவே எங்களுக்கு ஞானம் வரச்செய்ய வேண்டுமென்றார்கள். அப்பா உங்களுக்கு என்ன குறையிருக்கிறது. அதைச் சொல்லுங்கள்; அக்குறையைத்தீர்த்து விட்டு ஞானோபதேசம் செய்கிறேன். குறையுள்ள மனதில் உபதேசம் ஏறுது, என்றார் பிரஜாபதி.

எங்களுக்கு "ஆத்மா அழியாதது, அளவற்றது, எங்கும் நிறைந்தது, எல்லாம் அடங்கியது" என்று சொல்கிறார்களே அதை அறிய வேண்டும்—என்றார்கள்.

இதோ காட்டுகிறேன் பாருங்கள். அதோ உள்ள கங்காளத்தில் நிறைய ஜலம் பூரித்திருக்கிறது. பாருங்கள் அது நிச்சலன மாயிருக்கிறது. அதில் போய்ப் பாருங்கள் உங்கள் ஆத்மா தெரியும்; அந்த நீர் சலனப்பட்டால் அது மறைந்து விடும்—என்று பிரஜாபதி சொன்னார்.

இந்திரன் அப்படியே போய்ப் பார்த்தான். விரோசனனும் பார்த்தான். இருவரும் அந்த ஜலத்தில் தங்களுடைய நிழல் தெரியப் பார்த்தார்கள். இந்திரன் நீரில் சலனம் உண்டு பண்ணிப்பார்த்தான். நிழல் தெரியவில்லை. மறைந்து விட்டது. விரோசனன் அதையும் கவனித்தான். இவ்வளவு தான் இவர்கள் இருவரும் பார்த்தது.

இதிலிருந்து விரோசனன் தேஹமே ஆத்மாவென்று துணிந்து விட்டான்.

இந்திரன் அப்படி நினைத்தாலும் தோன்றி மறைவதாயிருப்பது எப்படி ஆத்மாவாகும்? அது அழியாதது; நித்திய மாயுள்ளது என்று சுருதி சொல்கிறதே. ஆகையால் கங்காள ஜலத்தில் தெரியும் நிழல் எப்படி ஆத்மாவாகக் கூடும்? என்று ஆலோசித்து சிந்தாக்கிராந்தனுனன்.

விரோசனனோ "நான் ஆத்மாவைப் பார்த்து விட்டேன், என் குறை தீர்ந்தது" என்று நிச்சிந்தையாக விருந்தான்.

இருவரும் பிரஜாபதியிடம் போய் அவரவர்கள் மனதில் கிரஹித்ததைச் சொன்னார்கள்.

பிரஜாபதி "குறைதீர்ந்தவன் போகலாம்" என்றார். விரோசனன் நாம் வந்த காரியம் ஸித்தித்த தென்று பிரஜாபதிக்கு வந்தனம் செய்து புறப்பட்டுப் போய் விட்டான்.

இந்திரன் "ஸ்வாமி! ஒரு சந்தேகம்" என்று, தனது சந்தேகத்தைச் சொல்லிக் கொண்டான்.

"அப்பா நீ உன் சந்தேகம் தெளிய 30-வருஷம் குருகுலவாஸம் செய்ய வேண்டு" மென்றார்.

"அப்படியே!" என்று இருந்தான். முப்பது வருஷம் குருகுலவாசம் செய்திருந்தபின் தான் கங்காள ஜலத்தில் பார்த்தது தேஹத்தினுடைய நிழல் என்றும், அது தண்ணீரின் சுத்தத்தால் பிரதிபிம்பக்கலாயிற்றென்றும், பிரதிபிம்பம் சாயல்மாத்திரமாதலால் அதற்கு ஸ்திரமான இருப்பு இல்லை யென்றும் ஸ்திரமில்லாதது ஆத்மாவாகாதென்றும் தெரிந்து கொண்டான். பின்னும் அவன் தண்ணீரைப்போல் மனம் தெளிந்தால் அதில் அறிவு பிரதிபிம்பிக்கிறதென்றும், சலனப்பட்டால் கங்காள ஜலத்தில் காணப்பட்ட நிழல்போல் அது மறைந்து விடுகிறதென்றும் உணர்ந்து கொண்டான்.

தான் பார்த்தது ஆத்மாவில்லையென்று தெரிந்து கொண்டதும் பிரஜாபதியை அணுகி, "ஸ்வாமி! நான் ஆத்மாவைக்காண வேண்டும்" என்று வணக்கமாய் விண்ணப்பம் செய்து கொண்டான்.

"அப்பா அதோ இருக்கிற நிலக்கண்ணாடியில் போய்ப்பார்! ஆத்மா தெரியும்." என்றார்.

அப்படியே போய்க் கண்ணாடியில் பார்த்தான். அதிலும் தேஹமே தான் தெரிந்தது. ஆனால் கண்ணாடியை ஆட்டினால் சாயல் மறையவில்லை. கண்ணாடிக்கெதிரேயுள்ள வரையில் தன்னுடைய சாயல் அதில் தெரிந்தது. ஆனால் அது தான் செய்வதையே செய்ததால், அதுவும் தன் நிழலே யென்று தெரிந்து கொண்டான்.

பிரஜாபதி "அப்பா! கண்ணாடியில் ஆத்மாவைப் பார்த்தாயா?" என்று கேட்டார்.

ஸ்வாமி! அதில் கண்டது சலனத்தால் மறையாவிட்டாலும், அதுவும் நிழல் நிழலே. அதனிடத்தில் சாசுவத லக்ஷணமில்லையே என்றான்.

"அப்படியானால் இன்னும் 35-வருஷம் குருகுலவாஸம் செய்யவேண்டு" மென்றார்.

அப்படியே என்று இருந்தான்.

ஜலத்தில் கண்ட பிரதிபிம்பத்துக்கும் கண்ணாடியில் கண்டதற்கும் வித்தியாஸமென்னவென்று யோசித்துப்பார்க்கையில், ஒன்று சலனத்தால் மறைந்தும், மற்றொன்று சலனப்படாமலும் சலனத்தால் மறையாமலுமிருக்கக் கண்டான்.

சலனமே சுபாவமாயுள்ள மனது யோக தாரணையில் கங்காள ஜலத்தைப்போல் (அலையற்ற நீர் போல்) தெளிந்து நின்றால் அதிலே அறிவு பிரகாசிக்கும்; அலை (சலனம்) உண்டானால் பிரகாசம் மறைந்துவிடும். கண்ணாடியைப் போல் அது தெளிவு நிலையில் உறுதிப்பட்டு ஸ்படிகமாக மாறி திடவிவேகத்தால் சித்தம் கலையாது நின்றால் அப்பொழுது அறிவு கண்ணாடியில் காணும்முகம்போல், மனதில் ஸ்திரமாய் பிரகாசிக்கும். ஆனாலும் அது பிரதிபிம்பம் அல்லது சாயையே அன்றி ஆத்மா வல்லவென்று உணர்ந்துகொண்டான். 35-வருஷங்கள் ஆனதும் "ஸ்வாமி! ஆத்மாவைக் காண வேண்டும்!" என்று பிரஜாபதியிடம் சென்று கேட்டான், அதற்குப் பிரஜாபதி

யானவர் "அப்பா கண்ணாடிமுன் சென்று பிராணனை வசப்படுத்திப்பார்!" என்று சொன்னார்.

பிராணனை வசப்படுத்திப் பார்க்கவும் கண்ணாடியும் தெரியவில்லை தேஹமும் தெரியவில்லை. எல்லாம் ஒரே இருளாயிருந்தது.

ஆத்மா ஸ்வயம்பிரகாசமானதால், இருள் தோன்றுகிறதே! இதுவும் ஆத்மாவல்லவென்று தீர்மானித்துக்கொண்டு பிரஜாபதியிடம் சென்றான்.

"அப்பா ஆத்மாவைப் பார்த்தாயா?" என்று கேட்டார் குரு.

"ஸ்வாமி! எல்லாம் இருட்பிழம்பாயிருக்கிறதே! ஆத்மா ஸ்வயம் பிரகாசமல்லவா!" என்றான்.

"அப்பா அப்படியானால் நீ இன்னும் 36-வருஷம் குருகுலவாஸம் செய்யவேண்டு" மென்றார்.

அப்படியே! என்று ஒப்புக்கொண்டு இருந்தான். இருந்த பொழுது, முதலில் கண்ட தரிசனமிரண்டும் ஸகளம், அதாவது அவயவங்களோடு கூடியதாயிருக்க, மூன்றாவது முறை கண்டது கேவலமாக அதாவது அவயவங்களின்றி எல்லாம் ஒரே (இருள்)மயமாகவிருந்ததென் றுணர்ந்தான். பின்னும் சிந்திக்கையில், ஸகளம் என்பது நாமரூப பேதங்களோடு கூடியது என்றும், கேவலம் என்பது சமுத்திரத்தில் விழுந்த நதிபோல் நாமரூப பேதமற்று எல்லாம் ஏகமாய் இருப்பதென்றும் உணர்ந்து கொண்டான்.

அனேகம், ஏகம் என்று சொல்லும் இரண்டு பதத்துக்கும் லக்ஷியமாயிருப்பது இன்னதென்று உணர்ந்தான்.

மண் மாத்திரமாயிருப்பது கேவலம். சட்டிபானை ரூபமாகப் பரிணமித்து நாமரூபபேதங்களோடு விளங்குவது ஸகளம் (ஸகலம்). ஸகல கேவலங்களிரண்டிலும் ஆத்மாவைக் காணக் கூடவில்லை யென்று உணர்ந்தான்.

இப்படி 36-வருஷகாலமிருந்து பிராணனை வசப்படுத்தி (வாசிவசம் செய்து) ஆத்மாவையறிய முயற்சித்து வந்தான்.

கடைசியில் குருவினிடம் சென்று "ஸ்வாமி! எனக்கு இன்னும் ஆத்ம தரிசனம் ஸித்திக்கவில்லை" யென்றான்.

"அப்பா, அந்த இருளையும்விட்டு அதனுள்ளே பார்!" என்றார்.

உடனே கேவலத்தை விட்டு நிஷ்களத்தை யடைந்தான்.

"நிஷ்களத்தில் நீயும் நானும் ஒன்றேயாகி' என்றபடி தத்பதம் துவம்பதமிரண்டும் அங்கே யொன்றுபட்டிருந்தது.

அது என்பது அழியாதது. நீ யென்பது அதன் பிரதிபிம்பம். அசலும் சாயலும் ஒன்றுபட்டால் நடுவிலுள்ளது தானாய் ஒடுங்கி விடும்.

கங்காள ஜலத்திலும், கண்ணாடி முன்னும் காண்பான், காண்பொருள், காட்சி யென மூன்று உருப்புகள் இருந்தன.

எல்லாம் இருள்மயமா யிருந்த கேவலதிசையில் காட்சி யொடுங்கி, காண்பான் காண்பொருள் இரண்டு மொன்றாக முயங்கி யிருந்தது.

அதுவும் கடந்த நிஷ்களத்திலோ காண்பான், காண்பொருள், இரண்டும் தோன்றிக் காட்சியில் ஒடுங்க, மூன்றும் ஒன்றான உண்மை தோன்றிற்று. அந்த உண்மையின்திடமே அசிபதம் என்பது. "அது நீயாக இருக்கிறாய்' என்பது பிரஜாபதியினுடைய உபதேசம். "தத் துவம் அசி" என்பதை வாயால் சொன்னால் விவாதம் வளருமென்று, சிஷ்யன் தீர்க்க தரிசனத்தையும் பிரத்தியட்சப் பிரமாணத்தையுமே இச்சித்தபடியால் அவனுக்கு அவன் கோரியதுபோல் சொல்லாமற் சொல்லி, உபதேசித்தார்.

உண்மை யறிவெல்லாம் இப்படித்தான் குரு-சிஷ்ய பாவத்திலிருந்துணரல் வேண்டும். இது தான் ஆத்மயோகம்: ஆத்மாவோடு கூட்டிவைப்பது. தேஹேந்திரியங்களெல்லாம் விளங்கியும் இவையெல்லாமற்ற ஒழிவில் ஒடுங்கிய உள்ளத்தில் எல்லாம் தானாகவிருந்துவாழும் இரகஸியப்

பொருளாகிய நான் (இதைத்தான் கூடஸ்தன் என்பது) ஸர்வாந்தர்யாமியாயிருக்கும் பிரஹ்மம் என்கிற ஸர்வசாக்ஷியோடு பேதமின்றி ஒன்று பட்டவனாயிருக்கிறேன்.—என்பது தியானத்தினால் செய்யும் விசாரணையின் முடிவாயிருக்கிறது. இது தான் இந்திரனுடைய ஸ்வானுபவம்.

இந்திரன் பிராணஸ்வரூபியாதலால், பிராணமயமான நான் ப்ரஹ்ம மயமாக விருக்கிறேன் என்று 101-வருஷம் குருகுலவாஸம் செய்து ஸ்வானுபவத்தி லுணர்ந்துகொண்டான்.

இந்த ஸ்வானுபவம் வாக்குக்கும் மனசுக்கும் எட்டாதது. ஆகையால் வார்த்தைகளாலும் மனதிலுதிக்கும் எண்ணங்களாலும் சொல்லி யல்லது விவரித்துக் காட்டக்கூடியதல்ல.

ஆனாலும் இதை வாக்காலும் மனத்தாலும் சுட்டிக் காட்டலாம்.

எப்படி யெனில் வாக்குப்போன மட்டில் சொல்லிக்கொண்டு போய் அதன் எல்லையடைந்து இதற்கு அப்பாலிருக்கிற தென்று வாக்கு மௌனமடைந்து நிற்பதால், வாக்குக்குட்பட்டதெல்லாம் "அது அல்ல" என்று குறிக்கலாம்; அப்படியே மனதால் கட்டக்கூடிய மனோராஜ்யமெல்லாம் செய்து இவ்வளவும் அது வல்லவென்று மனம் அடங்கி ஒழிவில் ஒடுங்கி நிற்பதால் அதைச் சுட்டிக்காட்டலாம். இப்படி சுட்டிக்காட்டக்கூடியதை "தொட்டுக் காட்ட வேண்டும்." அதாவது குரு தம் அருள் வலியினால் தொட்டுக் காட்டவேண்டும். இந்த இரகஸியத்தை மேற்றிசையார் அறிய விரும்புகிறார்கள். ஆனால் விரோசனன் "தேஹமே ஆத்மா" வென்றுதானிருக்கிறான். அந்த நிலையிலிருந்து அனுத்தவர்கள் தான் மேல் விசாரணை செய்ய அதிகாரிகளாவர்.

இந்த உண்மையை மிஸ்டர் டப்ளியூ. பி. யீஸ்ட் என்னும் ஆங்கிலேய கவிஞர், நமது ஸரோஜினிநாயுடு அம்மாளுடைய கவித்திறத்தை மதித்து அவருக்கு உபசரணை செய்யக்கூடிய விருந்துக்கூட்டத்தில் நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

மேற்றிசையார், தர்க்கஞானம் பேசியலுத்தார்கள். துரைத்தனகாரிய முயற்சியினாக்கமும் சலிப்பதாயிற்று. கீழ்த்திசையிலிருந்து வரா நின்ற நவசக்தி ஒளிமயமாய்ப் பரவி மேற்றிசையார் மனவிருளைப் போக்கி வருகிறது. சாகுந்தலம்செய்தகாளிதாஸர் கற்பனைசக்தியே சக்தி. அவர் கற்பனைசக்தி வாக்குமனம் கடந்ததாக விருக்கிறது. அவருடைய அற்புத கிரந்தத்தை இந்தியாவிலுள்ளவர்கள் தான் கேட்டு மகிழும் சக்திவாய்ந்தவர்கள். ஏனெனில் இந்தியாவிலே நித்தியவாழ்வுற்ற சாதியார் இருக்கிறார்கள். துரைத்தனங்கள் எத்தனையோ வந்து போய்க்கொண்டிருக்கின்றன. ஆனால் அந்த நித்திய பரம்பரை வாழ்வுமட்டும் அழியாது நடந்து வருகிறது. அவர் மட்டில், பிரிடிஷ் தேசத்தார் எவரையும் துரைத்தன காரிய விசாரத்தை விட்டொழிக்கும்படி சொன்னதில்லை. ஒரு தேசத்தா ரென்றிருந்தால் துரைத்தன காரிய விசாரம் இருக்க வேண்டியதுதான். ஆனால் துரைத்தன விசாரணை கர்த்தர்கள் மட்டு மிருந்தால் போதாது. அத்தேசம் மங்கிமடியாது வாழ்வதற்கு இராஜதுரந்தரர்களோடு, ருஷிகளும், முனிகளும், வித்யாரத்னங்களும், வாகவிகளும் கூட இருக்க வேண்டும்.

தேசத்தின் அழியாப்புகழுக்கு ஆஸ்பதமான எண்ணங்களையும் லக்ஷியங்களையும் காப்பாற்ற நாளை வருவதை யின்றறிந்து உஷாராயிருக்கும் இராஜ துரந்தரர் மட்டும் போதாது. நாளைக்கு மட்டுமல்ல, நூறு வருஷங்களுக்குப் பின்னால் வருவதைக்கூட இன்றே தீர்க்க தரிசன திருஷ்டியால் பார்த்து அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யவல்ல ருஷிகளும், வரகவிகளும் முனிபுங்கவர்களும் இருக்கவேண்டியதவசியம். தேசத்தார் தம் ஆத்மசக்திகுறையாமல் காப்பாற்ற வல்லவர்கள் எல்லாம் செய்ய வல்லவராவர். எது வேண்டுமானாலும் அவர்

களுக்கு விதிக்கும். மிஸ்டர் காந்தி தென் ஆபிரிக்காவில் ஆத்மசக்தியை உபயோகித்து வருவது நூற்று வருஷங்களுக்குப்பின். நேரக் கூடிய அபாயத்தைத்தடுக்கவே யன்றிவேறல்ல. இந்தியா ஆத்மசக்தியை இழந்தால் எல்லாம் இழந்ததாகும். அது மட்டு மிருந்தால் அதற்கு எல்லா நலமு முள்ளதாகும்.

---

## DEBT INCURRED MUST BE PAID.

### கடன்பட்டார் உடன்பட்டார்.

"கடன்பட்டார் நெஞ்சம்போலக்
கலங்கின னிலங்கைவேந்தன்".

பாடலீபுரத்தில் சந்திரகுப்தன் அன்னசத்திரத்துக்கு அதிகாரியாயிருந்த பொழுது தனபாக்கியசெட்டி யென்றுஒரு பணக்காரனிருந்தான்.

அவன் தீர்க்கதரிசி, திரிகாலஞானி. ஆனாலும் பணத்தைக் கொள்ளைவிட அவனுக்கு இஷ்டமில்லை. இராஜ்யத்தில் அக்ரம அதிக்ரமங்கள் மிஞ்சிவருவதைக்கண்டு அந்த செட்டி தன்னிடம் பணமிருப்பது தனக்கு ஆபத்தாய் முடியுமென்று கண்டு, கேட்டவர்களுக்கெல்லாம் கடன் கொடுப்பதாக விருது கட்டிக் கொண்டு விளம்பரப்படுத்தினான்.

யார் வந்து கடன்கேட்டாலும் இல்லை யென்று சொல்லுவதில்லை. அவனிடத்தில் ஒரே நிபந்தனை. கடன்வாங்குகிறவன் பிள்ளையார் சுழி யிட்டு தவணைபோட்டு அந்த தவணைதப்பாமல் கடனைக் கொடுத்துவிடுகிறேன் என்று ஸத்யம் செய்து கொடுக்கவேண்டும்.

அவனுக்கு வருஷகெடு, மாஸகெடு கிடையாது. ஜன்மாந்திரக் கணக்காக கால கெடு கேட்டாலும் அவன் இல்லையென்று சொல்லுவதில்லை.

"செட்டியாரே லக்ஷரூபாய் வேணும்: இந்த ஜன்மத்தில் என்னால்கொடுக்கமுடியாது; அடுத்த ஜன்மத்தில் கட்டாயம் செலுத்திவிடுகிறேன்"என்று ஒருவன் கேட்டால், "சரி, அப்படியே செய்" என்று செட்டியார் அவனிடம் கணக்குவைத்துக்கொண்டு கடன் கொடுத்து வருவார்.

இப்படி அடுத்த ஜன்மத்தில் கொடுப்பதாகச் சொன்னால் கூட சம்மதித்துப் பணம் கடன் கொடுக்கிறார் என்று ஜனங்களுக்குத் தெரிந்ததும் அதமர்களெல்லாம் சென்று அந்த செட்டியாரிடம் ஏராளமாகக் கடன் வாங்கத் தலைப்பட்டார்கள்.

செட்டியாரும் தான் கட்டின விருதுக்குப் பங்கம்வராமல் அவர்களுக்குக் கடன் கொடுத்து கடைசியில் ஓட்டாண்டியாய் விட்டார்.

செட்டியார் "பாப்பராய்விட்டார்" என்று தெரிந்ததும் ஜனங்கள் அவரையண்டினால் கொடுத்த கடனைத் திருப்பிக் கொடு என்று கேட்பாரென்று அவர் முகத்தைக்கூடப் பார்க்காமல் தூரத்தில் விலகிவிட்டார்கள்.

செட்டியார் பணமெல்லாமிழந்தாலும் கடன் கேட்க வருகிறவர்கள் துன்பமொழிந்ததென்று ஆறுதலடைந்து தரித்திரனாக விருந்தே தேஹத்தைவிட்டார்.

மறுஜன்மத்தில் செட்டியார் ஒரு ஒட்டனாகப் பிறந்தார்.

கடன்காரர்களெல்லாம் கணிசமின்றி கடன் வாங்கி வயிற்றை வளர்த்த தோஷத்தால் பன்றிகளாகப் பிறந்தார்கள்.

கர்மம் யாரை விட்டது !
கர்மதர்மத்தை யாரால் மாற்றமுடியும்?

ஒட்டனாய்ப்பிறந்த செட்டியார் கடன்காரர்களான பன்றிகளைப்பிடித்து, கொன்று தின்றால் உருசி குறைந்துபோகுமென்று, உயிரோடு தோலுரித்து இறைச்சியை நெருப்பில் வாட்ட ஆரம்பித்தார்.

இப்படி நடந்துவருங்காலையில் ஒரு பன்றிக் குட்டியை நெருப்பில் வாட்டி வருகையில், அந்த சூடு பொறுக்காமல் பிராணனும் போகாமல் அவதிப்பட அந்த அவஸ்தையில் அப்பன்றிக்குட்டிக்கு பூர்வஜன்மஞானம் உதிக்கலாயிற்று.

உதிக்கவும் அது, "செட்டியாரே, செட்டி

யாரே, இப்படி எத்தனைகாலம் நெருப்பில் வாட்டி வதைப்பீர்?" என்று கேட்டது.

ஒட்டன் பன்றிக்குட்டி பேசுவதைக்கண்டு அதிர்சயித்து, அதிலும் தன்னை "செட்டியாரே; செட்டியாரே!" யென்றழைத்ததனல் இதிலேதோ இரகஸியமிருக்கிறதென்று யோசிக்க, யோசனை தாண்டியுள்ள அந்த அவஸ்தையில் தன்னுடைய பூர்வஜன்ம வாஸனையுற்று உண்மை யுணரலானன்.

உடனே, ஒட்டன், "என்கடன் தீருகிறவரையில் வாட்டித்தான் ஆகவேணும், வேறுவிதியில்லையே!" என்றுரைத்தான்.

உடனே பன்றிக்குட்டி, "செட்டியாரே, பொறுத்ததெல்லாம் பொறுத்தீரே, இந்த ஜன்மத்துக்கு மட்டும்பொறுத்துக்கொள்ளும், அடுத்த ஜன்மத்தில் உமது கடனைத் தீர்த்துவிட்டு மறுகாரியம் 'பார்க்கிறேன்" என்று சொல்ல, "அப்படியே', என்று ஒப்புக்கொண்டார்.

உடனே அந்தப் பன்றிக்குட்டி அவன் கையிலிருந்து துள்ளிக் குதித்து நெருப்பில் விழுந்து அந்த தேஹத்தைவிட்டது.

ஒட்டனும் அந்த மாமிஸத்தைப் புசிக்கையில் தொண்டையில் எலும்பு சிக்கிக்கொண்டு பிராணனை விட்டான்.

இருவரும் புனர்ஜன்மமெடுத்து கடனைத் தீர்த்துக் கொண்டார்கள்—என்பது ஐதீக புராணம்.

இப்படி காலக்கணக்கை சாணளப்பான் பூக்சியாட்டமாக சாண்வயிறுள்ள எண்சாணுடம்பால் அளக்காமல், காலாதீதலக்ஷணமறிந்து கணக்கிட்டுத்திரிகாலமுணர்ந்து பிழைப்பவர்களே நித்திய வாழ்வு வாழும் சாதியைச் சேர்ந்தவராவர்.—மற்றோரெல்லாம் அற்பவாழ்வினரே.

## TEACHERS' COLUMN.

### Old Methods and New: "Child Study" and "Nature-Study."

"In the Educational world old methods are fast giving place to new. History is no longer a string of dates, or Geography the repetition of a number of names without life or meaning. That scholars learn much more readily if they feel an interest in the subject is a truism, and one great aim which the earnest Teacher always has in view is the rousing of such an interest."—*Herbert Hayens.*

### உபாத்தியாயர் பக்கம்.

போதனமுறை: பழையன, புதியன.

போதனை என்பது, போதம் = அறிவு, என்னும் பதத்திலிருந்துண்டாயது. போதி = அறிவைக்கொடுப்பது; ஞானத்தைக் கொடுப்பது; புத் = சிந்தித்தல். புத்தி = சிந்தனசக்தி. போதனை = அறிவோடொன்ருகச்செய்வது. அதாவது, அறிவுமயமாக்குவது. போதனமுறை = குழந்தைகள் புத்தியினல் சிந்தித்து அறிவினல் கிரகித்துக்கொள்ளச்செய்யும் முறை, அல்லது வழி. பழைய திண்ணைப்பள்ளிக்கூடங்களில் நெட்டுரு அல்லது பொட்டைப் பாடம் செய்துவைப்பது ஒன்றே வாத்தியாருக்குத் தெரிந்தவழி. இப்பொழுது அப்படியல்ல. குழந்தைகளுடைய இயற்கையறிவை யுபயோகித்து அதைக்கொண்டு தானே அவர்கள் அறியும்படி செய்வது நூதனவழியாகஏற்பட்டிருக்கிறது.

ஸ்வபாவமாகவே குழந்தைகளுக்கு எதையும் தெரிந்துக் கொள்ளவேண்டு மென்கிற அவாவுண்டு. இது அவர்களுக்கு இயற்கையாகவுள்ளது. இந்த அவாவானது பெற்றோர்களுடைய அல்லது பிள்ளை வளர்ப்பவர்களுடைய முயற்சியால் நல்லவிசாரபுத்தியாகத் தேறலாம்; அல்லது துஷ்ட புத்தியாகவும் மாறலாம். எப்படி யெனில்:—குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்கு உண்மையான உள்ளன்பிலிருந்துண்டாகும் அனுதாபம் காரணமாக உள்ளபடி அவர்கள் விசாரமனம் திருப்தி யடையும்படி பதில் சொல்லி அவர்கள் மனதைப் பழ

க்கி வந்தால், அவர்களுக்கு, சிரவண மனன சக்திகள் தானேயுண்டாகி எதையும் தீர விசாரித்துத் தெரிந்து கொள்ளும் சக்தியை யுண்டு பண்ணி வைக்கும்.

குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்கு சரியான பதில் கொடுக்காமல் சிடுசிடு வென்று கோபித்து அவர்கள் விசாரபுத்தியை அடக்கினால், அவர்களும் சிடுசிடு, கடுகடு வென்று கோபிக்கும் தன்மையுள்ளவர்களாகி தங்கள் அதிகாரத்தை தங்களிலும் இளைத்தவர்களான குழந்தைகளிடத்தில் காட்டி துஷ்டத்தனம் செய்யக்கற்றுக்கொள்ளுகிறார்கள்.

ஆகையால் குழந்தைகள் பாலப்பருவத்தில் தாய்முகங்கண்டு தம்குறைகளைத் தெரிவித்துக் கொள்ளக் கூடியவர்களாகும் பருவம் முதற்கொண்டே அவர்களிடத்து அனுதாபங்காட்டி அவர்கள் மனதை கல்விக்கேள்வி துறைகளில் பழக்கிவரவேண்டும். இது முக்கியமாய் தாயாரின் கடமையாகும். தாயார் படித்துத் தேறினவளாக இல்லாவிடினும், சுகுணமுடையவளாயின் இந்த வழிகளெல்லாம் அவளுக்குத்தானாகவே வரும். எப்படியென்றால் ,தாயன்பு எல்லாம் கற்கச்செய்யும், எல்லாவித கற்பனையையும் உண்டுபண்ணும். சுகுணமில்லாதவர்கள் படித்தவர்களானால், குழந்தைகளைத் தப்பாய் நடத்துவதனால் வரும் தீங்கறிந்து அவ்விதம் நடந்து கொள்ளாமல் தம்மைத்தானே திருத்திக் கொள்வார்கள். சுகுணமுமின்றி கல்வித் தேர்ச்சியுமில்லாதவர்கள் மிருகங்களே யாவார்கள். சுகுணத்தோடு கல்விப் பழக்கமும் கூடியவர்கள் கிரகதேவதைகளாவார்கள். இராஜ்ஜியத்தில் நடக்கும் அக்கிரம அழிச்சாடியங்களில் முக்கால்பங்கு தாய்மாருடைய குற்றத்தினால் உண்டானதாகச் சொல்லலாம். பிறகு பள்ளிக்கூடத்தில் பாடம் சொல்லும் வாத்தியார்கள் இந்த முதற்கோணலை முற்றும் கோணலாகச் செய்து விடுகிறார்கள். இதற்கு உதாரணமாக சென்ற சஞ்சிகையில் உற்பாத பிண்டம், என்று கையொப்பமிட்டு ஒரு குழந்தை யெழுதியிருக்கும் கடிதத்தைப் பாருங்கள். அதன் சிந்தனை ஓடும் ஓட்டத்தை யாராய்ந்து பார்த்தால் அதில் எத்தனை பேர்களுடைய அனுகூல பிரதிகூல சாரங்கள் சேர்ந்திருக்கின்றன வென்று தெரியும். நல்லார் பொல்லாருடைய வாசனை குழந்தைகளுக்குப் படியும் வழி அதில் நன்றாகத்தெரிகிறது.

மிஸ் இ. ஏ.மானிங் துரைசானி சீமையிலிருந்து இந்தியாவிற்கு வந்துபோன சமாச்சாரம் அதில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அம்மாளுடைய நல்லெண்ணத்தால் சுபவாசனை படியப்பெற்ற குழந்தைகள் இப்பொழுது எவ்வளவோ குணம்பெற்று விளங்குகிறார்கள். இது நமக்கு நேரில் தெரிந்த விஷயம். "தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பது ஸத்தியம். குழந்தைகளுக்கு இளமைப்பருவத்தில் படியும் எண்ணங்கள் பிந்தி அவர்கள் ஆயுஸ் பரியந்தம் அவர்களை நல்வழியிலோ தீவழியிலோ செலுத்தக்காரணமாகும். ஆதலால் குழந்தை-மனம் மாறாதபடி குழந்தைகளைப் பழக்க வேண்டியது பெற்றோர், உபாத்தியாயர் இவர்களுடைய கடமையாக விருக்கிறது. குழந்தை-மனம் மாறிவிட்டால் பின்னால் விளையும் அநர்த்தத்துக்கு அளவில்லை.குழந்தை-மனம் மாசு மருவற்றது. அன்பிலாடும் ஸ்வபாவம் அமைந்தது. உண்மையுணரும் சக்திவாய்ந்தது. உள்ளதைக்கண்டு பிடிக்கும் சூக்ஷ்மபுத்தியமையப் பெற்றது. இதற்குத்தான் (Intuition) தெய்விகபுத்தியென்று சொல்லுகிறது. குழந்தைகளை தெய்வமாகக் கொண்டாடுவதற்குக் காரணம் இந்த தெய்விகபுத்தி அவர்களிடத்தில் இயற்கையில் வாய்ந்திருப்பதனால் தான். ஸகவாசதோஷத்தால் இது மாறிவிடும். மாறிவிட்டால் ஸங்கடம்தான்.

பள்ளியிற் போதிக்கும் உபாத்தியாயர்கள் குழந்தைகளுடைய மனோபாவமறிந்து போதிக்க வேண்டும். வாசகபாடம் சொல்லும் பொழுதுசரித்திரம், பூகோளம்,பொதுஞானம் எல்லாம் அதில் பொதிந்து கிடப்பதையுணர்

ந்து ஒவ்வொன்றும் மற்றொன்றோடு பொருந்த அதையெடுத்து விரித்துரைத்துப் போதிக்க வேண்டும். அப்பொழுதுதான் அறிவு விசாலிக்கும். மேன்மேலும் கற்க ஆசையும் அவாவும் உண்டாகும். படிப்பில்வெறுப்புண்டானால் போதனாமுறையில் தப்பிருக்கிறதென்பது நிச்சயம்.

இதையெல்லாம் உத்தேசித்து, குழந்தைகளுக்கு இயல்பாயுள்ள சிரவண மனனசக்திகளுக்குக்கு குறைவு வராமல் வாத்தியார் அவர்கள் மனதைப் பழக்கும்படி வித்தியா போதனைசெய்து வரல்வேண்டும்.

முறைபறிந்து போதித்தால் குழந்தைகளுக்குச் சொல்லமுடியாத விஷயம் என்பது உலகிலில்லை. ஆனால், அவர்கள் மனோபக்குவப்படி எதையும் உணரும் சக்தி யவர்களுக்குண்டு. பால்யம் முதல் கண்கெட்ட குருடன் பால் எப்படி யிருக்கும் என்று கேட்டதற்கு, கொக்குப் போலிருக்குமென்று சொல்லி, கொக்கு, எப்படி யிருக்குமென்றதற்கு கையைக்கொக்குபோல்வைத்துக்காட்டியமேதாவி போல்குழந்தைகளுக்குப் போதிக்கும் உபாத்தியாயர்களுமிருக்கிறார்கள். எதையும் ஸ்வானுபவத்தாலேயே அறிய வேண்டும். அது ஒன்றினாலேயே அறியக்கூடும். மற்றப்படி அறிவதெல்லாம் இரவல் சரக்கேயாகும். மனோதத்துவங்களை உள்ளபடி விசாரித்து உண்மையறியாதவர்கள் உளக்கண்ணில்லாதவர்களாவார்கள். குழந்தைகளுக்கு மனக்கண் இல்லையேயன்றி உள்க்கண் இருக்கிறது. படிப்பெல்லாம் பஹிர் முகத்திற் கண்டதை அஹமுகத்திலும், அகத்திற் கண்டதை பஹிர் முகத்திலும் கண்டு தெரிந்துகொள்ளப் பழகும் மனப்பழக்கமன்றி வேறல்ல. இந்த மனப்பழக்கம் உண்டுபண்ணுவது மனோதத்துவமறிந்து போதிப்பவர்களுக்கே எளிதில் சாத்தியமாகும். அஃதிலார் போதனை, "குருடரும் குருடரும் குருட்டாட்டமாடிக்குழிவிழுந்தற்றே'யென்று திருமூலர் ஓதியதுபோல் தான் முடியும்.

ஆதலால் போதனாமுறையறிந்து போதிக்க முதலில் மனோதத்துவம் தெரியவேண்டும். இதற்கு "Child Study" என்று சொல்லும் நூதன வழியேற்பட்டிருக்கிறது. இஃதோடு உலகதத்துவமும் தெரியவேண்டும். அதாவது பிரகிருதி ஞானம் இருக்கவேண்டும் இந்த ஞானம் விர்த்திக்கும் முறைக்கு "Nature Study" என்று நூதனமாய் பேர் வழங்குகிறது. இவ்விரண்டு வித்யா ஸம்பத்தும் அமையப்பெற்றவர்களே உண்மையில் போதனா சக்தி வாய்ந்தவர்களாகலாம். இதற்கு வேண்டிய சாதக சாதனங்களைச் சுட்டிக் காட்டுவது இப்பத்திரிகையின் நோக்கமாகும்.

---

## CHILDREN'S RECORD OF SOCIAL SERVICE FROM ANCIENT TIMES.

### பாலபோத ஸமஷ்டி சேவை ஸாதனம்.

விசுவாமித்திரர் தசரத மஹா ராஜனிடம் சென்று ஸம்ஷ்டி சேவையார்த்தம் இராமலக்ஷ்மணர்களைத் தன் ஆச்ரமத்துக்கு அனுப்ப வேண்டுமென்று கேட்க அவர்களிருவருக்கும் நடந்த ஸம்வாதம் இது. இதனால் பூர்வம் தொட்டு இப்பரதக்கண்டத்தில் பாலபோதத்தில் ஸமஷ்டி சேவையும் அடங்கியே உள்ளதென்றும் நமது அரசர்பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்சவர்கள் வற்புறுத்தும் (Ideals of Social Service) ஸமஷ்டி சேவை சாதனாலக்ஷியம் இத்தேசத்திலும்புதிதல்லவன்றும் தானே ஏற்பட்டு விளங்கும்.

விச்வாமித்திரர்.—தசரதா, இதென்ன? எனதாச்ரமத்திலுனக்கிடம் கிடையாது. ரிஷிகளான நாங்கள் தானங்கிருக்கலாம். எங்களைத் தவிர ராமனைப் போலொத்தவனே அங்கு வரலாம். வேறு ஒருவரும் வரக்கூடாது. நீ வருகிறேனென்கிறாயே, உன்னாலென்ன செய்ய முடியும். உன்னாலாகக்கூடியகாரிய மென்னாலாகாதோ? பரசுராமருக்குப் பயந்து 60,000 ஸ்தி

ரீகளை விவாகஞ்செய்து கொண்ட நீ என்க்கென்ன உதவிபுரியப் போகிறாய்? உன்னாலொன்று மாகாது.

தசரதன்.—ஸ்வாமி! தாங்களிப்படிச் சொன்னால் நானென் செய்வேன்? என் குழந்தையை விட்டுப்பிரிந்து நானெவ்வித மிருப்பேன்?

விச்வாமித்திரர்.—என்ன தசரதா! "என் குழந்தை" யென்கிறாய்! எனக்கில்லாத அருமையா உனக்கு வந்து விட்டது? நீ நேற்று வந்தவன்தானே, இந்த இக்ஷ்வாகு குலமென்னுடைய குலம்தானே. என் குலத்தின் நன்மையை நான் கவனிக்கமாட்டேனா? உன்குழந்தையை நானென்னடா செய்து விடுவேன்? ஏனடா இவ்விதம் பதறுகிறாய்?

தசரதன்.—முனீச்வர, தாடகைக்கெதிரில்--

விச்வாமித்திரர்.—தாடகையிருந்தாலென்ன! இந்தக் குழந்தைக்குக் கெடுதி சம்பவிக்கும் படியான காரியம் நான் செய்வேனா?

தசரதன்.—முனிபுங்கவ, தாங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆகிலும் என் ராமனைவிட்டுப் பிரிந்திருப்பதெனக் கசாத்தியம்.

விச்வாமித்திரர்.—நான் சொல்வதைக்கேள்: 'தசரதா! இந்த ராமனுக்கொருவராலு மொருவகைத்தீங்கும் நேரிடாது. நான் கடிந்து பேசும்படியாக ஒன்றும் சொல்லாதே. குழந்தையை என்னுடனனுப்பு.'

தசரதன்.—இவ்விதம் தாங்கள் கேட்பீர்களென்று நானெண்ணவேயில்லையே. இது தெரிந்திருந்தால் முன்னமேயே ஜாக்கிரதையாயிருந்திருப்பேன். முனிவர, நானிக்குழந்தையின்முகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்! இந்த உலகத்தில் யாரைப்பார்த்தாலும் "இவனுக்கு ராமன்மாதிரி கண்களிருக்கின்றன, இவனுக்கு தேகம் நமது ராமனுடையது போலிருக்கிறது," என்று நினைத்து நினைத்து ஸதா ஸர்வகாலம் ராமனையே தியானித்துக் கொண்டிருக்கிறேன். இப்போதவனைத் தங்களுடன் அனுப்புவேனானால், ஐயோ! குழந்தையிப்போதென்ன செய்கிறானோ, எப்படி சாப்பிடுகிறானோ, சரியானபடி தூங்குகிறானோ, அவனுக்கேதாவ தசௌகரியமேற்படுமோ என்ற மாதிரியான பற்பல யோசனைகளுக்கென் மனமீடுபட நானடங்காத் துயரடைவேன். ராமனுக்கங்கே எவ்விதத் துயரும் நேரிடாமலிருந்த போதிலும் என் மனதிலேதாவது சந்தேகமேற்பட்டாற் போதும், அதை என்னால் பொறுக்க முடியாது. இங்கேயே என் மனதுக்கேதாவதுகலக்கம் நேரிடுமாயின் அதையென் குழந்தையின் முகமலரைக் கண்டு மறக்கின்றேன். அப்படியிருக்க நானெப்படி குழந்தையைவிட்டுப் பிரிவேன்?

விச்வாமித்திரர்.—தசரதா, உன் புத்தி தடுமாறுகிறது. ஜாக்கிரதை! கொஞ்சமாவது யோசித்துப் பார்க்காமலேன் இவ்விதம் பிதற்றுகிறாய்? இந்த ராமனால் தாடகாவதமாக வேண்டியிருக்கிறது. தாடகையிறந்தாலெத்தனை ஜீவர்களுக்கு க்ஷேமமுண்டாகும்? இப்போதெத்தனை கோடி பேர்கள் அத்தாடகையின் உபத்திரவத்தால் வருந்துகிறார்கள்? இவ்விராமனை நானழைத்துக்கொண்டு போனாலுனக்குமட்டும் கொஞ்சம் வருத்த மேற்படும். ஆனாலநேககோடி ஜீவர்களுக்கு நலமுண்டாகும். இவைகளிலெது அதிகமாய்க் கவனிக்கத்தக்கது? கணக்கற்ற ஜீவர்கள் நலமடைகிறது முக்கியமா, நீ மட்டும் கொஞ்சம் புத்திராபிமான சுகத்தை யநுபவிப்பதுமுக்கியமா? யோசித்துப் பார்.

தசரதன்.—ஸ்வாமி! என்னை மன்னிக்க வேண்டும். ராமன் குழந்தை. அவனாவது தாடகையைக் கொல்வதாவது? ஐயனே, நான் வேண்டுமென்றால் எனது ரதகஜதுரக பதாதிகளுடன் வந்திருந்து தங்களுடைய வேள்வியைக் காக்கின்றேன்.

விச்வாமித்திரர். — தசரதா, உன்னாலாகக் கூடிய காரியமென்னாலாகாதா? இப்போதுபுரிய வேண்டிய போருக்கு உன்பலமும் போதாது, எனது சௌரியமும் போதாது. ஏன்! பரசுராமராலேயே மாளாதகாரியம். ஆனாலிக் குழந்தை

யாலந்தக் காரியம் நடைபெறு மென்பதிற்கை யமில்லை, நாங்கள் செய்கின்ற யாகம் என்ன வென்று நன்ருக உனக்குத் தெரியாது போ லும். எங்களுக்கதனலேதாவது ஹிதமேற் பட்ட வேண்டுமென்கிற எண்ணமே கிடையாது. ஜகத்தின் நன்மையைக் கோரியே நாங்கள் கிருத்யங்களைச் செய்கிறோம். இத்தகைய யாக ங்களினின்று உண்டாகின்ற சக்திகளால்(Forces) தானிவ்வுலகம் விகாசமுறையில் முன்னு க்கு வந்து கொண்டிருக்கிறது, தர்மம் நிலைநிற் கிறது. காலாகாலத்தில் மழை பெய்கிறது. நதி களில் ஜலமோடுகின்றது. இந்த ரஹஸிய முன க்கு நன்ருய்த்தெரியவில்லை. இவ்விதமாக நாங் கள் யாகஞ்செய்யுமிடத்தில் யுத்தம் செய்வது சாதாரணமான காரியமல்ல, கொஞ்சங்கூட மனதுக்கு சாஞ்சல்ப மேற்படக்கூடாது,கோப த்தின் ஜாடை கூட இருக்கலாகாது. வில்லை யெடுப்பது பாணத்தைப் பூட்டுவது, அதைத் தொடுப்பது, ஆகிய இச்செய்கைகளனைத்தும் ஒரு யந்திரத்தாற் செய்யப் பட்டவைகளைப் போலிருக்கவேண்டும் (Mechanical). இப்ப டிப்பட்ட யுத்தம் புரிய என்னுலேயும்மாளாது; ஆனுலிக்குழந்தையாலது சாதிக்கப்பட்டு நிலை பெறும்.

தசரதன்.—எனக்குத் தாங்கள் சொல்வ தொன்றும் புலப்படவில்லையே. தங்களாலும் பரசுராமராலு மாகாதகாரிய மிக்குழந்தையா லாகு மென்ருல் நம்பக்கூடிய தாயில்லையே.

விச்வாமித்திரர்.—ஹே, தசரதா, உனக் கொன்றும் தெரியாது. உன் குழந்தையின் யோக்யதை யென்னவென்றறிய உனக்குத் திறமையில்லை. உன் மதி தத்தளிக்கின்றது. இப்போது நீ அரசனுயிராமல் மந்திரியாயிருந் திருப்பாயானுல் நீயே இக்குழந்தையை என் னுடனனுப்ப சிபார்சுசெய்வாய். இந்த ராமனை நீ யுன்குழந்தையாகப் பார்க்கிருயே அல்லாது வேறுவிதமாகப் பார்க்க உனக்குத் தெரிய வில்லை. அவனுடைய உண்மையான ஸ்வபாவ மானது புத்திரவாஞ்சையால் மறைபட்டு நிற் கிறது. அவன் ஆறுமாதக்குழந்தையாயிருந்த போதெப்படி யுனக்குத்தோன்றினுனே அப் படியேதானிப்போதும் தோன்றுகிறுன். ஆனு லிதினுண்மையான ரஹஸ்யம்முழுவதுமெனக் குத் தெரியும், என்னைப்போலொத்த தபஸ் விகளான வஸிஷ்டர் முதலியவர்களுக்கும் தெரியும். எங்களுக் கிப்புவியின்கண் ணென்ன வேலை யென்று சொல்கிறேன் கேள். ஜாக்ரா வஸ்தையிலிந்த ஸ்தூலலோகத்திற் கெவ்வித உபகாரம் செய்ய முடியுமோ அதை யெல்லாம் செய்து, ஸ்வப்னுதி அவஸ்தைகளில் ஸூக்ஷ்ம லோகங்களில் சஞ்சாரம் செய்து அங்குள்ள ஜீவகோடிகளுக் கெந்தெந்த மாதிரியான உதவி புரிய முடியுமோ அதையெல்லாம் புரிவோம். இவ்விதம் எக்காலத்திலும் எல்லா அவஸ்தை களிலும் ஜகத்துக் குழைப்பதையே கருதித் தன்னை மறந்து நிற்குமெங்களைப்போ லுள்ள வர்களுக்கு, எங்கேயாவது இவ்வுலகிலுள்ள அதர்மத்தைப்போக்கி தர்மத்தை நிலைநிறுத் தும்பொருட்டு ஒரு விசேஷமான ஜீவன் பிறந் தால், அந்தயோகமார்க்கத்தி லுழைத்துக் கொண்டிருக்கு மொவ்வொருவருக்குமது உட னே தெரியும். இந்த ராமனப்படிப்பட்ட மஹாத்மா வென்றறி. எங்களுக்கெல்லாமது வெகுநன்ருகத் தெரியும். சமீபத்திலுனது சபையை நாடியநேகம் பெரியவர்கள் வந்து கொண்டிருக்கிருர்களென்று வஸிஷ்டரிடம் சொல்லிக்கொண்டிருந்தாயமே' அதற்குக் காரணமிதுதான். இப்படிப்பட்ட ஒரு ஜீவன் பிறந்தா லதைப்பக்குவப்படுத்தி அதனுலிவ் வுலகிற்காகவேண்டிய காரியமனைத்தையும் நடத்திவைக்கும் வண்ணம் எங்களைப்போ லொத்த அநேகம்பேர்களந்த ஜீவனைச்சூழ்ந்து நிற்பார்கள். இவ்விஷய முனக்குத்தெரிய வில்லையே யென்ருல் அதனுடைய குற்றம், குழந்தையின் தவறல்ல. இவ்வித அக்ஞான முன்னைமட்டு மிக்காலத்தில் பாதிக்கிறதென் பதில்லை, எக்காலத்திலு மிக்கஷ்டமுண்டு. ஒரு பெரிய ஜீவனவதாரம் செய்தாலது எல்

லாருக்கும் தெரியாது. அதற்கநுகுணமான ஸ்வபாவமுள்ளவர்களுக்கது தெரியுமே யல்லாது வேறு தகப்பனுயினும், தமையனுயினும், பந்துவர்க்கங்க ளாயினும், ஒருவருக்கும் தெரியாது. இவ்வித அஞ்ஞானிக ளறிஞர்களைத் தூஷிப்பது சகஜம்தான். அதனுலவர்களுக் கேற்படுகிற கெடுதலுக் களவே கிடையாது. நீயவ்விதம் கெட்டுப்போகாமல் குழந்தையை என்னுடனனுப்புவாய்.

தசரதன்:—முனிபுங்கவ, தாங்கள் சொல்வதெல்லா முண்மைதான். மிகத்தெளிவாக எடுத்துரைத்திருக்கின்றீர்கள். நான் செய்கிறது தவறுதான், அதர்மம்தான். இதனுலெனக்கென்ன கெடுதல் வந்தாலும் வரட்டும், நான் குழந்தையை விட்டுப்பிரியேன்.

விச்வாமித்திரர்:—தசரதா, உனது புத்தி முழுவதையுமிழந்து விட்டாய் நீ இந்த ஜன்மமெடுத்தது வீண்தான். லோகஸங்கிரஹார்த்தம் பிறந்த ஓர் ஜீவனுக்கு ஸ்தூலதேகம் கொடுப்பதற்கு நீ காரணபூதமாக ஏற்பட்டாய். அவ்வளவே. அந்த ஜீவனுன்னுடைய தல்ல. நீ யதன்மீதெவ்வளவபிமானம் வைக்கலாமோ அதற்குமேல் வைத்துக் கெட்டுப்போய்விட்டாய். உன்னுடைய தர்மத்தினின்றும் தவறலானுய். அடே, இந்த அற்ப பரீக்ஷையில் ஜயிக்க சக்தி யற்றவனுன நீ யோகமார்க்கத்திலேற்படும் அநேக கடினமான பரீக்ஷைகளிலெப்படி வெற்றியடையப் போகிருய். சத்தியம், தர்மமிவையெல்லா மெங்கே போய்விட்டது? உன் ஜன்மம் வீண் ஜன்மம்.

இவ்வாறு சொல்லிவிட்டு விச்வாமித்திர முனிவர் வெளியே புறப்படலாயினர். தசரதன் தனது குலகுருவை நோக்கி, "குருஸ்வாமி, விச்வாமித்திரருக்கதிக சலக்க மேற்பட்டிருக்கிறதுபோல் தோன்றுகிறது. நான் செய்திருக்கிற அதர்மத்திற் கேதாவது பரிஹாரமுண்டா? இல்லாமற்போனுலும் பாதகமில்லை. இதனுலெனக்கென்ன கெடுதி நேர்ந்தாலும் பெரிதல்ல குழந்தைக் கிதனுலொருவித துன்பமும் நேரிடாதே" என்று கேட்டான். வஸிஷ்டர் "தசரதா, உனது புத்தி இவ்வளவு தூரம் கெட்டுப் போகுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. நீ யிப்போது செய்திருக்கிறதைக்காட்டிலு மதிகமான பாபமிப்புவியிலொருவனுலும் செய்ய முடியாது. இதிலிருந்தென்ன கெடுதல்தான் சம்பவிக்குமென்று சொல்ல முடியாது. பகவத் காரியத்துக்குக் குறுக்காக நின்ருயே, அதைவிட வேறு பாபமென்ன உண்டு? இதனுலுண்டாகும் கெடுதலுன்னை மட்டுமல்ல. ராமன், லக்ஷ்மணன், இன்னு முன்னுடைய பந்துக்கள், ராஜ்ய மெல்லாவற்றையும் பாதிக்கும். என்ன கெடுதிதான் சம்பவிக்குமென்று சொல்லவே முடியாது. உனது குழந்தைமீதன்பு வைத்திருக்கிற பாவனையாலுனது குழந்தைகளுக் களவில்லாத் துன்பங்களை விளைவித்து விட்டனையே" என்று வருத்தத்துடன் சொன்னுர். அதைக்கேட்டது முதல் நடுங்கிப்பதறி. தசரத மன்னன், "ஐயோ நானென்ன மதிமோசம் போனேன்? என் குழந்தைக்கே கெடுதலை விளைவித்தேனே பாபி நான். ஸ்வாமி, நானென்ன செய்வேன்? இப்போது என்ன செய்வது? தாங்களாக்ஞையிடவேண்டும். குழந்தைக் கொருவித இன்னலும் வாராதவண்ணம் காத்தருளல் வேண்டும்" என்று வஸிஷ்ட முனிவரை நோக்கிப் பிரார்த்திக்க வஸிஷ்டர், "இந்தக்ஷணமே விச்வாமித்திரரை வரவழைத்து அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவருடன் ராமன் லக்ஷ்மணனுகிய இரண்டு குழந்தைகளையு மனுப்பு. அவர்களுக் கொருவித கெடுதலு முண்டாகாது. அதிக சிரேயஸையடைவார்கள்" என்று சொன்னுர். அவ்விதமே தசரதன் விச்வாமித்திர முனிவரைத் திரும்ப வரவழைத்து அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ராமலக்ஷ்மணர்களிருவரையு மவர்பாலொப்புவித்தான். விச்வாமித்திரருமதிக ஆனந்தங் கொண்டு, "தசரதா, உனக்கு மங்களமுண்டாகுக. வஸிஷ்ட மஹரிஷியைப் போலுள்ள குலகுரு இருக்கும்

வரையி னுனக்கொருவித கெடுதலும் சம்பவியாது," என்று சொல்லிக் குழந்தைகளுடன் வனம் நோக்கிப் புறப்பட்டார்.

(இந்த ஸம்பாஷணை ஆர். ஸ்ரீநிவாஸ ஐயர் எம். ஏ. அவர்கள் எழுதியதிலிருந்தெடுக்கப்பட்டது. பூர்ண சந்திரோதயம் பார்க்க.)

## QUERIES AND ANSWERS.

### பிரசனோத்தரம்.

"அருமைப் பொருள்யாது?"

பால சுப்ரமணியன் (ஞானக்குழந்தை) ஔவைப்பாட்டியைநோக்கி, 'உலகத்தில் அருமையாகிய பொருள் யாது?" என்று கேட்டான். அதற்கு ஔவையார் சொன்ன உத்தரம் இது:-

[சுப்ரமண்யர் சக்தியாயுதமாகிய கூர் வேல் உடையவராதலால் 'வரிவடி வேலோய்' என்பது கூர் புத்தியும் தெய்வ ஞானமுமுடைய குழந்தைகள் எல்லாரையும் ஸமஷ்டிபாவத்தில் குறிக்கும்.] கூர்மையான வேலாயுதம்=ஞான சத்தியாகிய ஆயுதம். இதை Intuition என்றும் Intuitive Faculty என்றும் ஒருவாறு சுட்டிச் சொல்லுவர்.

"அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிது அரிது மானிட ராத லரிது;
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது;
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிது;
ஞானமுங் கல்வியுநயந்த காலையும்
தானமுந் தவமுந் தான்செய லரிது;
தானமுந் தவமுந் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே."

என்று ஔவையார் பதில் கூறினர்.

இதனுல் உலகத்தில் அருமையாகிய பொருள் மானிடராகப்பிறத்தல். அதுவும் கூன் குருடு செவிடு அலி முதலிய அங்கபங்கமின்றிப் பிறப்பது அருமையினும் அருமை. அப்படிப் பிறந்த பொழுதும் கல்வியையும் அறிவையும் விரும்புவது அதிலும் அருமையாகும். (கல்வி= மனப்பழக்கம். அறிவு = அறிவுமயமாகும் ஞானஸாதனத் தன்மை.)

கல்வி, அறிவு இரண்டு மிருக்கினும் அதை நல்வழியினுபயோகிப்பதற்கான தவத்தையும் தர்மத்தையும் கடைப்பிடித்தல் அருமையாகும் முற்சொல்லிய சாதனங்களோடு கூட மனித ஜன்மத்தில் அங்க பங்க மின்றி கல்வியைக் கற்றுக் கற்றபடி நின்று அறிவுதானுதற்கின்றியமையாத ஞானசாதனத்தைத் தேடி யடைந்து அந்த சாதன வழியிலிருந்து சாதிக்க தருமத்தையும் தவத்தையும் வழுவாது செய்வார்களாயின் அவர்கள் தேவர்களுக் கொப்பாகி ஸமஷ்டி சேவைக்குப் பாத்திரர்களாவார்கள்.

"நெய்விளக்சேற்றல்."

பிரசனம்—"நெய்விளக் கேற்றுவதென்றால் என்ன? அதன் உட்கருத்துயாது?" என்று ஒருவர் பூதத்தாழ்வாரைக் கேட்க அவர் தமிழறிந்த தன்யராதலால், தான் நெய்விளக்கேற்றுமாறு இதுவென்று பின்வரும் வெண்பாவால் பதில் சொன்னர்.

[தகளி = நெய்யேற்கும் பாண்டம்; அல்லது அகல்.]

உத்தரம்.

அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியாய்—நன்புருகி
ஞானச்சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்."

மெய்ஞ்ஞானத்தைத் தரும் தமிழ் கற்ற நான், அன்பே அகலாயும், ஆர்வமே (ஆசையே) நெய்யாகவும், இனிமையாய் உருகும் மனமே (கனிந்தமனதே) திரியாயும், நல்லிரக்கத்துடன் மெய்ஞ்ஞானச் சுடரையுடைய தீபம் (விளக்கு) ஏற்றினேன்—என்று சொன்னர்.

## GENTLENESS.

### சாந்தம்.

ஒருவன் எல்லாராலும் நேசிக்கப்படவேண்டுமானல் அவன் சாந்தசீலனுயிருக்கவேண்டும். ஒருவன் சாந்தசீலனுயிருப்பானுனல் அவனைப் பார்த்து மற்றோரும் சாந்தசீலர்களாய் இருக்க முயற்சிப்பார்கள். சாந்தமானது படித்து உயர்ந்த ஸ்திதியிலிருப்பவர்களையும் படிக்காதவர்

களையும் ஒன்று சேர்த்து அவர்களை சினேகிதர்களாகச் செய்கிறது. சாந்தத்தைப் பலவிதங்களில் காட்டலாம். அவைகளில் முக்கியமானவை இரண்டு.

வாக்கில் சாந்தம்.

நாம் பேசும்பொழுது இனிமையாகப் பேச வேண்டும். நாம் சொல்லுவது உண்மையாயிருந்தாலும் அது மற்றவர்களுக்கு வருத்தத்தை உண்டாக்கு மென்றால் அதைச் சொல்லக்கூடாது. ஆனால் அதற்காகப் பொய்யும் பேசக்கூடாது. நாம் "சத்தியம்வத" "பிரியம்வத" (சத்தியத்தைச் சொல் அதே சமயத்தில் எல்லாருக்கும் இஷ்டமானதையே சொல்) என்னும் வசனத்தை அனுஸரிக்க வேண்டும். நாம் எப்பொழுதும் சாந்தமாகவே பேசல் வேண்டும். நாம் கோபத்தினாலாவது, விசனத்தினாலாவது, தொந்திரவினாலாவது ஒருவருக்கு மனம் புண்ணாகும்படி பேசக்கூடாது.

நடத்தையில் சாந்தம்.

படித்தறியாதவர்களுக்கு நாம் இவைகளைச் சொல்லி எடுத்துக் காட்டுவதோடு நாம் சொல்லுகிறபடி நடந்தும் காட்டவேண்டும். நாம் சாந்தசீலர்களாய் இருக்க வேண்டுமானால் நமது எண்ணங்கள் எப்பொழுதும் நல்லதாய் இருக்கவேண்டும். நாம் எவருக்கும் தீங்கு நினைக்கக்கூடாது. அவர்கள் விருத்தியே நமது எண்ணங்களாய் இருக்க வேண்டும். நாம் ஒருவருக்குத் தீங்கு நினைத்தோமானால் அந்த எண்ணமானது தானே வார்த்தையிலும் காரியங்களிலும் காட்டிக்கொள்ளும். "தன் வினை தன்னைச்சுடும்" என்றபடி அந்தத்தீங்கு கடைசியில் நம்மையே வந்து சூழும்.

ஜீவகாருண்யம்.

சாந்தகுணமானது மிருகங்களிடத்திலும் காட்டப்படலாம். ஜீவராசிக ளெல்லாவற்றினிடத்திலும் காட்டப்படும் சாந்தம் ஜீவகாருண்யமாகும். மாடு, குதிரை முதலிய ஜந்துக்கள் வண்டிகளை வேகமாய் இழுக்காவிட்டால் அதை அடிக்கிறார்கள். மற்றப்பிராணிகளை ஹிம்ஸிக்கிறார்கள். அதுவெல்லாம் தப்பு. வாயில்லாச் சீவன்களை வதைக்கக்கூடாது. நாம் அதனிடம் அன்பாக நடந்துக்கொண்டால் அதுவும் அதன் வேலையைச் சரியாகச்செய்யும். ஒருவன் சாந்த சீலனாயிருப்பின் அவனே பெரிய மஹான். அப்படிக்கில்லாத சாமான்ய ஜனங்கள் நாம் வீட்டில் வளர்க்கும் பிராணிகளிடத்தில் குரூரமாய் நடந்து கொள்வதைத் தடுக்க வென்று ஒரு சட்ட மிருக்கிறது. பிராணிகளுக்குக் குரூரம் செய்வதைத் தடுப்பதற்கான சங்கமொன்று ஏற்பட்டு ஆடு, மாடு, குதிரை, கோழி முதலிய ஜந்துக்களிடம் குரூரமாய் நடந்து கொள்கிறவர்களைக் கண்டு பிடித்து மாஜிஸ்ட்ரேட்டுகள் முன் குற்றஞ்சாட்டி சட்டப்படி அபராதம் விதிக்கச்செய்கிறார்கள். "போரடிக்கிற மாட்டின்வாயைக்கட்டலாமா"! என்பது நம் தேசத்தில் பூர்வம் தொட்டு வழங்கி வரும் பழமொழி. மனிதனுக்குழைக்கிற மாட்டின் வாயைக் கட்டக்கூடாது என்றிருக்கும் பொழுது அவனுக்கு சவாரி போகவும் இதர விதங்களிலும் சாதகமாயிருக்கும் பிராணிகளைக் குரூரமாய் நடத்தலாமா? குரூரசித்தம் கடூரசிந்தையையும், கடூர சிந்தை கொடியபாதகமான செய்கைகளையும் விளைக்கும். ஆகையால் நாம் ஹிருதய சுத்தியால் சாந்த சீலர்களாக விருக்கப்பழகல் வேண்டும்.

ஹிருதய சுத்திக்கு இன்றியமையாதது ஸத்திய விரதம். ஸத்திய விரதம் என்றால் பொய் சொல்லாமை, பொய் சொல்லாமையில் பொய் நினையாமையும் அடங்கும். வாக்குசுத்தி யுண்டானால் தான் ஹிருதயசுத்தி யுண்டாகும். இதைத்தான் "வாய்மையால் அஹம் தூய்மையாம்" என்றார் பெரியோர்.

## TRANSFUSION COLUMN.

### THE CHILDREN'S DELIGHT.

### 'THE FAIRIES.'

I

Do you wonder where the fairies are
That folks declare have vanished ?
They ' re very near, yet very far,
But neither dead nor banished.
They live in the same green world to-day
As in by-gone ages olden ;
And you enter in by the ancient way
Through the ivory gate and golden.

II

" Tis the land of dreams ; oh ! fair and bright
hat land to many a rover ;
But the heart must be pure and the conscience light
That would cross its threshold over.
The worldly man for its joys may yearn
When pomp and pride embolden,
But never for him shall the hinges turn
Of the ivory gate and golden.

III

While the innocent child, with eyes undim
As the sky in its blueness o'er him,
Has only to touch its portal's rim,
And it opens wide before him.
Some night when the sun in darkness dips,
We will see that dreamland olden,
And you shall touch with your finger-tips,
The ivory gate and golden.

ANON.

---

## குழந்தை-மனக் களிப்பு.

### தைஜஸாநந்தம்-திவ்யலோகம்.

'ஓங்காரியென்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தையுடையவள்
ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றிட்டு
ஹ்றீங்காரத் துள்ளே யினிதிருந்தாளே."

—திருமந்திரோபதேசம்.

I

திவ்யலோகம் என்று சொல்லும்
தேவபோகம் எங்கே?
திவ்யமோகம் என்று சொல்லும்
தேவ பாவம் எங்கே?
திவ்யலோக மில்லை யில்லை, தேவபோக
மில்லை யென்பர்
திவ்யமோகமான வந்த தேவ பாவ
மில்லை யென்பர்,
திவ்யலோகமில்லை யெனினு முண்டதுதா
னிங்கே யுண்மை,
திவ்யமான தேவபோகம் அண்ணல்
உண்ணக்கண்டேன்!
திவ்யமோக மான தேவ பாவனந்தா
னுண்டேல்
திவ்யலோக போக மோக மெல்லா
மிங்கேயுண்டே!

II

தைஜஸன்தான் வாஸம் செய்யும் திவ்ய
லோகம் கண்டேன்!
தைஜஸன்தான் அநுபவிக்கும் தேவ
போக முண்டேன்!
தைஜஸன்தான் ஓடியாடும் இரண்ய
கர்ப்பன் உண்டேல்,
தைஜஸன்தான் நாடியோடும் திவ்ய
மோக முண்டே!
தைஜஸனைத் தேடி நானும் ஓடினேனே
நாடி யூடே
தைஜஸனும் ஓடியந்த உள்ளக் கமலத்
தொளித்தான்!
தைஜஸனை மூடியுள்ள உள்ளக் கமலம்
திறக்கவேண்டில்,
தேஜோமய மானவந்த ஜ்யோதிர்
மனஸ் ஆகவேண்டும்.

III

ஜ்யோதிர் மனஸ் தானேயம்மா தேவ-
லோகத்தைச் சிருஷ்டி செய்யும்
"ஜ்யோதிரந்தர்க் கதம்மன:!" என்று
சுருதி அதைத் துதிக்கும்;
ஜ்யோதிர்ந்தர்க்கத மனஸே குழந்தை-மன
மென்று சொல்வர்;
ஜ்யோதிரந்தர்க்கத மனஸே முத்தொ
ழிலு மியற்ற வல்லது;
ஜ்யோதிரந்தர்க் கதமனஸும் ஆடியோடி
யலுத்தேயம்மா
ஜ்யோதிரந்தர்க்கத வெளியில் ஒடுங்கி
நிற்கக் கற்றதானல்

ஜ்யோதிரந்தர்க் கத மனவின் லயமே
பால னாகும் சொன்னேன்.
ஜ்யோதிர்மய மான பாலன் பள்ளி
கொள்வதும் பாற்கடல்தான்.

IV

பாற்கடலில் பள்ளி கொண்ட பரஞ்
சோதியைப் பால னென்றே
பாற்கடலில் அமுதம்கடைந் தெடுத்த
வர்கள் கொண்டாடப்
பாற்கடலில் தோன்றியவச் சந்திரனை
மாமா வென்று
பாற்கடலின் அமுதுண்ட பாலர்கள்தா
மழைக்கப் பாரேன்.
பாற்கடலிற் பிறந்ததினல் பாலன்
முகம் பால் வடியும்
பாற்கடலிற் பள்ளி கொண்டால்
தேவர் லீலை செய்யலாகும்
பாற்கடலே தூயமனம்:
தூயமனம் வாய்மையினல்
பாற்கடலே யாகும் கண்டாய்!
நேர்மை யிது வாய்மை சொன்
[னேன்.

---

SHORT STORY.

## KAMALAKSHI.

### கமலாக்ஷி.

ஓர் சிறுகதை.

"என்னடீ! நேரமாயிற்று! வயிற்றுப்பசி கப, கபவென்று தீப்பற்றினாற்போல் பற்று கிறது! நேற்று அங்கே விருந்து ஸம்ப்ரமத்தில் கொஞ்சம் ஜாஸ்தியாய்த் தின்றுவிட்டதில் வயிற்றுக்குள் 'இராம-ராவணயுத்தம்' செய்தது. மருந்தும் தின்றேன்; இராத்திரியும் சாப்பிடாமல் படுத்துக்கொண்டு 'லங்கணம்' போட்டேன். இப்போ பசி அஸாத்தியமாயிருக்கிறது. பொறுக்கக்கூடியதாகவில்லை. ஒரு நொடியில் சமையலாகவேணும்! கேட்டதா!" என்றார் லக்ஷ்மணய்யர். அதற்கு அவர் மனைவி சுந்தராம்பாள், "இங்கே யொருவருக்கும் காத டைத்துப்போகவில்லை: எல்லாங்கேட்டுத்தான் கிடக்கிறது?" என்று முணுமுணுத்தாள் "என்ன! சமையல் ஆய்விட்டதா? இன்னும், நாழிகைசெல்லுமா? என்று நான் கேட்கிறேன். என்னமோ சொல்லுகிறாய்?" என்று அதட்ட, அம்மாள்—

"ஆச்சு! ஆச்சு! எல்லா சமையலுந்தான் ஆய்விட்டதே! உங்களுக்குப் பூஜைவேறே லட்சணம். இரண்டுகாசு கையிலேயிருனல் அன்று "ஸ்ரீமந்நாராயணன் பெட்டியைக் கொண்டுவந்துவை" யென்று பூஜை, அபிஷேகம், அர்ச்சனை, வெகு மும்முரமாய்ச் செய்கிறது. ஒரு பைசாவுக்கும் வழியின்றிக் கைவறண்டால் "அந்த இழவுபெட்டியைப்போடு: தண்ணீரைத்தொலைக்கலாம்" என்பதும் தெரியாதோ? இப்படி சுவாமியை வஞ்சித்துத் தானே இப்படியாச்சு? எல்லாம் அபிஷேகம் பண்ணித்தொலைத்தால் கொட்டிக்கொள்ளலாம். இது தான்கண்டது! நிம்மதியா யாவது பிழைக்கிறோமா? அதுதானுமில்லை. என்னமோ என்தலையிலெழுத்து இப்படியாயிற்று!" எனச் சிறிது மனவருத்தத்துடன் பேசினள். அதற்கு அவர்,

"ஏண்டி! அதற்கென்னபண்ணுகிறது? நம்ம கஷ்டம் நாமனுபவிக்க வேண்டியதுதான். வௌவால் வீட்டுக்கு வௌவால்போனல் நீ யொருபக்கம் நானெருபக்கம் என்பது போல் தான். அப்படியாவது சொத்து யதேஷ்டமாய் என் அப்பன்வைத்துப்போயிருந்தால் நீ பெரிய இடத்துப் பெண்ணுயிருப்பதற்கும் உன் அந்தஸ்துக்கும் பெருமையா யிருக்கும்?

"ஆ! இந்தப் பேச்சுத்தான் கண்டது. உங்களைக் கட்டிக்கொண்டு நான் வாழ்ந்த சுகம் போதும்: ஜன்மத்துக்கும் போதுமம்மா! எத்தனையோ பேர் எவ்வளவோ வாசனையாய்ப் பிழைக்கிறார்கள். ஒரு நாளாவது நல்ல நகை யென்பது கண்டேனா? நல்லசேலையுடுத்தியிருப்பேனா? பக்கத்தாத்து குஞ்சம்மாளுக் கெவ்வளவோ நகை! கணக்குண்டா! காதில் வைரக்

கம்மல்களும், கையில் தங்கக்கொலுசும், காப்பும், மூக்கில் வைரப்புல்லாக்கும், இடையில் பனாரீஸ்பட்டும் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதுமே? மஹாலட்சுமியாட்டமா! நானும் நாலு பெண்களைப்போல் தான் நல்ல பதவிக்கு வரவேணுமென்று மனக்கோட்டை கட்டிக்கொண்டிருந்தேன். "பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளியமரத்தில் ஏறவேணும்" என்றாற்போல உங்களைக்கட்டிக் கொண்டு நன்றாய் அனுபவிக்கிறேன்!"—என்று கோப தாபத்துடன் மொழிந்தாள் அய்யருக்குப்பசி பதிகமாயிருந்தாலும், தான் மறுபடி ஏதாவது பேசினால் இன்றைக்கு அன்னத்துக்கு சுன்னமாய்விடுமென்று தெரிந்து, யாதும் பேசாது மௌனம் சாதித்து ஜல்தியில் பூஜையைமுடித்து சாப்பிட உட்கார்ந்து, "கோபு எங்கே?" என்றார் அதற்கு அவர் மனைவி "எல்லாம் அவன் அப்புறம் வந்து தொலைவன். நீங்கள் முன்னாடி சாப்பிட்டுக் காரியமிருந்தால் பாருங்கள்! எனக்கில்லாத உருக்கம் தான் உங்களுக்கு வந்ததாக்கும்" என, அய்யர் 'சரி! சரி!!' என வெழுந்து சென்றார். இவர் வெளியே சென்றதும், அவர் மனைவி வாசல்பக்கமிருந்தஉள்நடையில் உட்கார்ந்திருந்தாள். அவள் கண்கள் செக்கச் செவேரென்றிருந்தத. ஒருவேளை சாப்பிடாத தோஷத்தானோ அல்லது கோபத்தாலோ அப்படியிருந்தன அவள் இடதுகையால் நாடியைத்தாங்கிக்கொண்டு வலதுகையால் கீழே மண்ணைக்கிள்ளிக்கொண்டு ஆழ்ந்த யோஜனையில் இருப்பவளாகத் தென்பட்டது. அவள் அடிக்கடி தாழ்த்தியிருந்த தனது தலையை ஏறிட்டு வாசல் கதவை உற்று உற்றுப்பார்ப்பதனால் ஏதோ ஒன்றைப்பற்றிச் சிந்தித்து ஆவலாய் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாகவும் தெற்றென விளங்கிற்று.

சற்று நேரத்திற்கெல்லாம் கதவைத்தட்டுகிற சப்தம்கேட்டு "யாரது"! என்றாள். "ஏனம்மா! நான்தான்."—என்றோரினியகுரல் அவள் காதுக் கெட்டிற்று. அவள் உடனே கொதித்தெழுந்து "கட்டேலேபோவாய்! பட்டினி போட்டு எல்லாரையும் கொல்லவா பார்க்கிறாய்? உனக்கு ஒரு சாங்காலம்வரவில்லையே! எத்தனையோபேர் பொடுக்பொடுக்கென்று போய் விடுகிறார்களே! உனக்கு ஒரு எமன்வரவில்லையே!" என இன்னனையகடுமொழிகளைப்புகன்று ஆக்ரோஷத்துடன் பற்களை நெறநெறவென்று கடித்துக்கொண்டு கதவைத்திறந்தாள். பையன் உட்புகுந்ததும், கொடுத்தாள் இரண்டரை பையன் கன்னத்தில். பையன் பசியின் கொடுமையாலும், அடிபட்ட அதிர்ச்சியாலும், ஒன்றுந்தோற்றாது நிலத்தின்மீது விழ்ந்தான். அப்படியே அவனைக் கரகரவென்றிழுத்து வந்து தயிர்கடையும் மத்தால் கால்வீங்கவடித்து "உட்கார் பிண்டத்துக்கு! பேச்சு மூச்சுக் காட்டினையோ விழுந்தது உதை" என்று கடூரமாய் மொழிந்து இலைபோட்டு அன்னம் பரிமாறி உண்ணச்சொல்லித் தான் எதிர்குந்தி "தின்கிறதைப்பார் ரணபாதகன். காமாட்டி படுவா" என, பையன் கண்ணும் கண்ணீருமாய் "ஏனம்மா! சாப்பிடுகிறபோதுகூட வைகிறாய்?" என உருக்கத்துடன் கேட்டான். எப்பேர்ப்பட்ட கன்னெஞ்சையும் இளகச் செய்யும் அவன்மொழி அவளுக்கு நாராசம் போன்றிருந்தது. அப்படியே ஒரு குட்டும் குட்டினாள். இதற்குள் தன் புருஷன் கதவைக் தட்டுகிற சப்தம்கேட்டு எழுந்துபோய்க் கதவைத்திறக்க அய்யர் உள்ளேவந்தார். அதற்குள் பையன் கண்களைத்துடைத்துக் கொண்டான். அய்யர் "ஏனடி இவனழுகிறான்! அடித்தாயா என்ன?" என்றார். அதற்கு அவர் மனைவி,

"ஆமாமா! யாரோ அடித்தார்கள். குற அழுகை அழுகச்சொல்லுங்கோ! சோறு சாப்பிடுகிறதேயில்லை. தாங்கள் இதைப்பற்றி யென்னை ஒன்றுங் கேட்கவேண்டாம். எனக்கு அவன்பேரில் காற்றடிக்கக்கூட சகிக்கமாட்டேன். எனக்கிருக்கிற பக்ஷம் பராமரிப்பு மாதிரி அவன் தாயாருக்குக்கூட இராது. ஏண்டா நீ என்கட்டிக்கரும்போ இல்லையோடா?" என்று அவனை ஜாடையாய் முறைத்துப்

பார்த்துக்கேட்டாள். நாம் ஏதாவது தப்புந் தாறுமாய்ச் சொன்னால் பிரகாரம் சாதிப்பதில் ஆக்ஷேபமிராது' எனப் பையன்நடுங்கி "ஆமா!" என்றான். அய்யர்: "பார்த்தையா! அவள் எவ்வளவு பிரியமாயிருக்கிறாள்! அவள் சொல்லை மீறி நடக்காதே!' என உபதேசம்பண்ணி விட்டு பொடிச்சிட்டிகையையெடுத்து உறிஞ்சி விட்டு நடையில் ஆயாசத்தால் குறட்டைவிட லானார். கோபாலன் சாப்பிட்டெழுந்து நடையில் வந்து தனக்கு தகப்பனார் போதித்ததையும், தன் மாற்றாந்தாய் தனக்கு இதுகாலும் செய்வான் வேண்டிய இடுக்கண்களை ஆராய்ந்தெடுத்தும், அதற்குத்தான் தெய்வச்செயலாய்த் தப்புவிக்க நேர்ந்ததையும் எண்ணி எண்ணி மனம் புண்ணாகி இன்னும் சில நாளிங்கிருந்தால் நாம்உயிரோடு மீளமாட்டோம்; எங்கேயாவது—கடவுள் விட்டவழிவிடட்டும்! போய்விடுவதே சரி" என, மனமானது தாமரையிலைத் தண்ணீர்போல் தத்தளிக்க, செய்வதியாதெனவறியானாய்த் தன்னிரண்டு வேஷ்டிகளையுமெடுத்துக்கொண்டு வெளிப்புறப்பட்டு விட்டான்.

* * *

அப்போது அவனுக்கு சுமார் 18, 20-பிராயமிருக்கலாம். "எவ்வளவு கஷ்டம்வரினும் அனுபவித்துச் சுகப்படுவோம்" என்று தோற்றும்படியான வசீகரமானமுகமும், விசாலித்த கண்களும், எடுத்தமுக்கும் நீண்டுயர்ந்தகன்ற தோட்களும், சிவந்தமேனியும், தைரிய லட்சுமியும், தனலட்மியும் இருப்பிடமாகக்கொண்டு விளங்காநிற்கும் அவன் ஆற்றலும், அதிரூபமும், கண்டோர்மனம் கவரவும் இளகவும் செய்யக்கூடியனவாகவிருந்தன. இன்னனைய சிறப்புற்ற இவ்இளங்குமரன் மதுரைமாநகரம் சேர்ந்தனன்.

* * *

அக்காலத்தில் மகமதியர்கள் படையெடுத்துவந்து ஜனங்களைப்பலவாறு இம்சைசெய்து வந்தார்கள். அவர்களைத்துரத்திவிட்டுவரும்படி விஜயநகரத்தில் ஆண்டிருந்த இராயர் தனது படைத்தலைவனை யனுப்பியதாகவும், அப்படியே அவன் துரத்திவிட்டு அந்நாட்டை ஆண்டுவந்ததாகவும் பின்பு பாண்டியவம்சத்தைச் சேர்ந்த சிலர் இராயருடைய உதவி மீது ஆண்டிருந்தனரென்றும்,சில கலகங்கள் விளையவும், நாகம்மநாயக்கரை விஜயநகரத்து இராஜா அனுப்பியதாகவும், அவர்கலகத்தையடக்கித் தானே ஆண்டிருந்ததாகவும், பின்பு பாண்டியன் போய் விஜயநகர இராஜாவிடம் விண்ணப்பித்துக்கொள்ள, அவருடைய மகனை விசுவநாத நாயக்கரையும், அரியநாயகமுதலியாரையும் அனுப்பியதாகவும், விசுவநாதநாயக்கர் தான் இப்பிரதேசத்தில் இராஜாங்கத்தை ஸ்தாபித்தவரென்றும்,இவருக்குப்பின் அனேக நாயக்கமார்கள் ஆண்டிருந்தனரென்றும் அவர்களுக்கெல்லாம் சிறந்தவர் திருமலைநாயக்கரென்போரென்றும், சரித்திரமூலங்களால் தெரிகிறது. அக்கால் அரசாண்டிருந்த ஒருவர் தற்செயலாய் வீதிவழியே பவனிவருகையில் நம் கதாநாயகன்மீது, ஓர்வித அன்பும், ஆர்வமும், ஜெனித்தபடியால் மிக்கபிரேமையோடு அபிமானித்து வந்தார். சிலகலகங்கள் விளையவே அக்கால் திருச்சினாப்பள்ளியிலாண்டிருந்த சொக்கநாத நாயக்கரிடம் தகுந்த சிபார்சுடன் அவனை அனுப்பினார். இனி நமது கதை ஆரம்பமாகின்றது.

* * *

திருச்சினாப்பள்ளியை வந்தடைந்தான் கோபாலன். அப்போது மாலைநேரம்.

"புதைத்தகாரிருட்படமொழித்தித்துணைப்போதும்
உதித்தகீழ்த்திசைமகள்புணர்ந்தாயெனவூடிக் [ல்
கொதித்துமேற்றிசையணங்கலவள்செம்பதங்கொடுமே
உதைத்ததாளெனச்சிவந்ததுவெய்யவனுடலம்."

என்றபடி, மறைத்தகாரிருளாகிய போர்வையைக்களைந்து உதித்த நீ கிழக்குத்திக்காகியமாதைக் கூடினையென மேற்குத்திக்காகிய மாதானவள் பிணங்கி செம்பஞ்சூட்டப்பெற்ற தனது அடிகளைக்கொண்டு உதைத்த தொப்ப சூரியனது

உடலானது சிவந்து தோற்றியது. பொன்னிறமான வெயில் எறித்தது. குன்றனிடத் திருந்தோடிவராநின்ற அருவிகளின் நீரானது பொன்னீர் காய்ச்சிப் வூற்றப்பெற்றூற் போல, பளபளத்துக்கொண்டிருந்தது. நிர்மலமான ஆகாயத்தினிடத்து சிறிது ரோஜாவர்ணம் படர்ந்து அழகாயிருந்தது.சிறிதுநேரம்கழிந்த பின் சிறுகிரணங்களானவை ஒளிவிட்டுப்பிரகாசித்துக் கொண்டிருந்தன. இளந்தென்றல் வீசியது. கோபாலன் மாலைநேரத்தின் அழகின் தன்மையையும், கடவுளின் திருவிளையாட்டின் செயல்களையும் எண்ணியெண்ணி ஆனந்தித்து திருச்சிறைப்பள்ளி சென்று அவன் ஓர் வீட்டினில் தங்கி மறுநாள் அரசன் கொலுக்கூடத்தை நாடிச்சென்றான். அரசன் மிகுந்த உருக்கத்துடன் யோகக்ஷேமாதிகளைக்குறித்து விசாரித்துச்சின்னாள் வைத்திருந்து தனக்குட்பட்டிருந்த ஓர் நாட்டுக்கு அரசனாகநியமித்து முன்னிருந்த அரசன் புகார் உண்டானமையால் நீக்கப்பட்டிருக்கிறானெனவும் தெரிவித்துச் சொல்லுமாறு கட்டளையிடுவித்தலால் அவ்விதமே அவன்செல்ல, அவ்வரசன் "தனக்கு விரோதியாய் வந்துவிட்டானே" என்றகங்கரித்துச் சிறைப்படுத்திப் படாதபாடு படுத்திக் கொண்டிருந்தான்.

இங்கே இங்ஙனம் நிகழுழி, திருச்சிறைப்பள்ளியிலோர் நாள் அரசன் மந்திரியை ஓர் யுத்தத்தின் பொருட்டு அனுப்பிவிட்டதால் தான் மட்டும் தனித்து உடைவாளணிந்து நகர்சோதனைக்குப்புறப்பட்டு வருகையில் ஓர் பெரிய தெருவின் ஓர் வீட்டினில் ஓர் ஸ்திரீ தன்கையில் வீணையையேந்தி,

I

காண்பதிவ்வுலகம் ஜீவகாருண்யக் கடவுள் தன்னால்
ஊண்தசைநரம் போடஸ்தி ஒன்று சேர்த்ததிலுண்டாக்கி
ஆண் பெண்ணென்றமைத்தருக்ஷ்ம மவ்வுயிரறிவிற் கண்டு
வீண்பொழுதினைப் போக்காமல் வீணையைவாசிநெஞ்சே,

II

கருத்துணர் ஞானனந்தக்கரணம்பொற்றருவின் [காக்ஷி
திருத்தகுசோலை நீழல் சேருநீகனியின் தேனை
யருத்திநல்லருள் புகட்டும் ஆஸ்பதமான பக்தி
விருத்தியாமிதுவே ஞானம் வீணையைவாசி நெஞ்சே.

III

நாரத னனுமன் வாணிநல்ல தும்புரு மற்றோர்கள்
காரணக் கைலையாளி கருணையைப் பெறமுயன்ற
சீரணி மார்க்கமீது தெய்வமால் ஆசையீது
வீர சாதகம் விடாமல் வீணையை வாசிநெஞ்சே.

என்றவாறு சிறந்த வீணையைக் கரத்திலேந்தி தாயுமானவர் பாடலிலுள்ள பராபரக்கண்ணிகளை குழல், யாழ், முதலியவைகளைத் தோற்கச் செயவல்ல மிருதுவான தன் குரலால் பாடுவதைக்கேட்ட அரசன் பிரமித்து ஆச்சரியமெய்தி கேட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் அப்பெண்மணி வீணைவாசிப்பதை நிறுத்தி "ஐயோ! நாதா! எவ்விடம் சென்றீரோ? இத்தனை நாளும் என்னைவிட்டுப் பிரிந்திரே! என்னைப்பிரியவும் உமது மன மிடங்கொடுத்ததோ? ஆ! இந்த ஊருக்குத் தாங்கள் வந்திருந்து அரசரிடம் சென்றதாகவும், அவர் ஏதோ உம்மைத் தகுந்த உத்தியோகத்திலமர்த்தி வெளியூருக் கனுப்பியதாகவும் கேள்வியுற்றேனே தவிரத்தங்களைநேரிற்காணும்பாக்கியத்தையடையவில்லையே? தங்களுக்கு யான் இவ்வளவு தூரம் என்ன அபசாரம் பண்ணினேன்? யானிவ்வாறு பிரிவுற்று வருந்தலும் ஏ!ஜெகதீசா! உனக்கும் ஏற்குமோ?" எனத் திடீரென்று கீழ் விழுந்து விட்டாள். அரசன் தான் காலமே அனுப்பியவன் தான் இவளது கணவனாயிருத்தல் கூடுமென்றும், தன்னிடம் விவாகமான விஷயத்தைப்பற்றி அவன் உரையாமையைப் பற்றியும், தான் அதிகாரப் பத்திரம் அனுப்ப மறந்துபோனதைப்பற்றியும், அவன் சிறைப்பட்டிருப்பதாக வதந்தியானமையைக் குறித்தும் தற்சமயம் சேனாதிபதியாய் அனுப்ப ஒருவருமில்லாததைப்பற்றியும் வருந்திக்கொண்டிருந்தான். இது இங்ஙனம் நிற்க,

* * *

ஓர்நாட் காலமே திருச்சி நாட்டுக்குட்பட்ட ஓர் சிற்றிராஜ்ஜியத்தின்கண் ஒருவன் கட்டப்பட்ட கயிறுடன் கொலைசெய்யப்பட அவ்வரசன் முன்னிலையில் நிறுத்தப்பட்டிருந்தான். அவன் கண்களிலிருந்து நீர் மாலைமாலையாய் வடிந்துகொண்டிருந்தது. அவ்வரசன் எப்பொழுது ஆக்ஞை செய்வானோவென இரு கொலையாளிகள் இருபக்கத்திலும் ஏந்திய வாளுடன் நின்று கொண்டிருந்தனர். அப்போது குதிரைகளின் காலடி சப்தமும் சேனாவீரரின் ஆரவாரிப்பும் கேட்டது. அரசன் திகைத்து உற்றுநோக்கியிருப்ப, குதிரைப் படைகளோடும் காலாட்படைகளோடும் ஓர் சேனாதிபதி அவ்வரசன் முன்வந்து "ஏ! அரசே! நின்பாலனுப்பிய சிற்றரசன் எங்கே?" என, அரசன் நடுங்கி முன்னிலையில் கொணர்ந்து நிறுத்தினன். அவர்கள் யாவரையும் அழைத்துக்கொண்டு அச்சேனாதிபதி புதிதாயனுப்பப் பட்ட சிற்றரசனோடுவந்து திருச்சி அரண்மனை புக்கனர். அரசன், கொலைசெய்ய வெத்தனித்த சிற்றரசனுக்குத் தக்க சிக்ஷை விதித்து நம் கதாநாயகனை அவன் அரசுரிமையைக் கைக்கொள்ள அனுமதித்தான். இதற்குள் செனாதிபதி" தங்கள் மனைவியை அறவேமறந்துவிடலாமோ?" என "ஐயோ! அவள் இங்குள்ளாளெனத் தெரியவில்லையே! என்ன செய்வேன்?" என, சேனாதிபதி "அவள் தங்கள் முன்னிலையிலேயே உள்ளாள்" எனக்கூறித் தன் மேலுடையைக் கழற்றவும், ஆஹா! என்ன சொல்வாம்! அழகும் குணமும் பொருந்திய தன் மனைவி கமலாக்ஷியே இவ்வாறு சேனாதிபதியாயுருவெடுத்துத் தன்னைக் காத்தாளென்பதையும் தெரிந்த கோபாலன் தன் மனையாளைக்கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் சோரவிட்டு மறுபடியும் அந்நாடேகித் தன் சிறிய தாயார் இறந்துபோனமையால் தந்தையாரை அழைத்து வந்து சுகமே வாழ்ந்தனன். சுபம்.

"தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."—திருக்குறள்.

## THE VIVEKACHINTAMANI.

"The November-December issue of this popular Tamil Journal devoted to the Children's Movement is a model number full of interesting, and instructive matter. It opens with an inspiriting character-study and biographical sketch of Mr. M. K. Gandhi followed by the utterance of the Viceroy on the principle of passive resistance or soul-force. Then comes an instructive article on the All-India Children's Memorial Movement with another on the Viceroy and the Vernaculars. The Multi-Milionaire's Secret or that which money cannot buy" is sure to be read with interest. "The Missing Man" is a short story of the type from Sherlock Holmes. "Scintillations from the life of a kindergarten-child," is a reminiscence of school life in which an intelligent girl writes of "My School and School Experience." The Vice-Principal of the Teachers' College who had looked through "the Children's Record Number of the Vivekachintamani" with great interest writes to the Editor recording his opinion which we fully endorse. He writes: "The literature bears ample testimony to your genuine and enthusiastic activities on behalf of our student population. Your endeavours to inspire them with lofty ideals deserve the warmest praise."
—*The Indian Patriot.*

---

"The November-December issue of this popular Tamil Journal devoted to the Children's Movement is a good number full of interesting, and instructive matter. It opens with a readable character-study and biographical sketch of Mr. M. K. Gandhi followed by the utterance of the Viceroy on the principle of passive resistance or soul-force. Then comes an instructive article on the All-India Children's Memorial Movement with another on "the Viceroy and the Vernaculars." The Vice-Principal of the Teachers' College who had looked through the Children's Record Number of the "Vivekachintamani" with great interest writes to the Editor recording his opinion which we fully endorse. He writes: "The literature bears ample testimony to your genuine and enthusiastic activities on behalf of our student population. Your endeavours to inspire them with lofty ideals deserve the warmest praise."—*The Hindu.*

---

"A model number........full of instructive matter........ generally interesting."—*The Madras Standard.*